உ
சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**
அருளாணையின் வண்ணம்
வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில்
தவராஜ சிங்கம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்
தவப்பெருஞ் சிங்கத்தின் மீதிலமர்ந்து
அருளும் காட்சி
292 ஆவது மகேஸ்வர பூஜைத் திருநாள்
சிறப்புக் கருதி வெளியிடப்பெற்றது.

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 2. வைகாசி பகுதி 8.

## வாரணாசியில்

19—5—80உ திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் 20 ஆவது அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான்சுவாமிகள் அவர்களின் நினைவுநாள் ஆகும். தற்போது பட்டத்தை அலங்கரித்தருளும் 21 ஆவது அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசி வாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் இம் மகேஸ்வர பூஜைத் திருநாளை ஸ்ரீ வாரணாசியில் (காசியில்) தமக்குச் சொந்தமான கேதார கட்டம் ஸ்ரீ குமார சுவாமி மடத்தில் விமரிசையாக நிகழ்த்தத் திருவுளம் பற்றியுள்ளார்கள். அங்கு விஜயம் செய்தருளியுள்ளார்கள்.

1—6—80உ அன்று நிகழவுள்ள ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் மகேஸ்வர பூஜைத் திருநாள் பற்றிய விளக்கங்கள் உள்ளே பிரசுரிக்கப் பெற்றுள்ளன.

பண்டார மும்மணிக்கோவை எட்டாம் திருப்பாடலின்மூன்றும் பகுதிக்கு அருள் பழுத்த கனிச் சுவையாக ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் விளக்கம் அருளியிருக்கிறார்கள். குருமுதல்வர், குரு என்னும் இருசொற்களும் உரிய பொருள் தெளிவு பெறுமாறு அருளியுள்ளார்கள்.

விடையரங்கப் பகுதியுள் - அறிஞர்பெருமக்களின் விடைகளுடன் வாசக அறிஞர்களின்விடைகளுள் இரண்டும் சேர்த்து வெளியிடப் பெற்றுள்ளன.

திரு. மு. அருணாசலம் அவர்களின் கந்தர்கலிவெண்பாவுள் சமயம் என்ற தொடர்க்கட்டுரை ஓராண்டு இடைவெளிக்குப் பிறகு இந்த இதழிலிருந்து வெளி வருகிறது.

திரு. கி. வா. ஜ. அவர்கள் எழுதும் திருவாரூர் நான்மணிமாலை விளக்கம், மகாவித்துவான் திரு, ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் எழுதும் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் அம்புலிப்பருவப் பாடல் விளக்கம் ஆகியனவும் ஏற்றுமதி, இறக்குமதி, தலயாத்திரைமுதலிய பகுதிகளும் இவ்விதழைஅலங்கரிக் கின்றன.

## சந்தாதாரர்களுக்கு ஒரு குறிப்பு

ஒவ்வொரு மாதமும் 10-ம்தேதி அனைத்துச் சந்தாதாரர்களுக்கும் இதழ்கள் அனுப்பப் பெறுகின்றன. விடுபடாமலிருக்க முகவரிகளைச் சரிபார்த்தே அனுப்புகிறோம். இருப்பினும் சென்ற இதழ் சிலருக்குக் கிடைக்கவில்லை என்று தெரிகிறது. இதழ் கிடைக்கப்பெறாத அன்பர்கள், கடிதம் எழுதியுள்ளார்கள்.

இது இவ்வலுவலகத்தின் பிழையன்று. இதுதொடர்பாக P.M.G. அவர்கட்கும் புகார் செய்துள்ளேன்.

சரியான முகவரி உள்ள சில இதழ்களும் 'முகவரியில் நபர் இல்லை' என்ற குறிப்புடன் திருப்பி அனுப்பப்படுகின்றன.

எனவே வாசக அன்பர்களும் தத்தம் ஊரிலுள்ள அஞ்சல் அலுவலகங்ளில் இது குறித்துப் புகார் செய்து இந்நிலையை நன்னிலை யாக்க உதவ வேண்டுகிறேன்.

டி. ஆ-ர்.

உ

சொக்கலிங்கம் துணை

# திருநாரையூரில் நம்பியாண்டார் நம்பிகள் நினைவு திருமுறைத் திருவிழா

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் 21-வது அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ஆணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

ரௌத்ரி ஆண்டு வைகாசித்திங்கள் 5-ஆம் நாள் (18—5—80) ஞாயிற்றுக்கிழமை இரவு 8-மணிக்குத் தொடங்கும்.

திருமுறைவாணர்கள்

திருமுறைக் கலாநிதி, சுரலய இசைவள்ளல்

**திரு. M. கனகசபைப் பிள்ளை,**

ஸ்ரீகாசிமடம் சிவசிவ ஒலிமண்டப ஓதுவார், சிதம்பரம்.

திருமுறைக் கலாநிதி,

**திரு. M. சுப்பிரமணிய முதலியார்,**

ஸ்ரீகாசிமடம் கட்டளை ஓதுவார், திருநாரையூர்.

சங்கீத பூஷணம், கலைமாமணி

**தருமபுரம் P. சாமிநாத முதலியார், சென்னை.**

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்

**திரு. T. M. விசுவலிங்கம், சபாபதி சகோதரர்கள்.**

திருவாவடுதுறை.

**திரு. N. ஆறுமுக தேசிகர்** — வயலின், விழுதியூர்

**திரு. கோ. வெங்கட்ராமன்** — மிருதங்கம்

திருப்பனந்தாள்

By order of His Holiness

**R. V. சுப்பிரமணியன்,**

Manager.

Religious Charities
Tirupanandal

குறிப்பு:— திருநாரையூரில் ஒரு ஓதுவார் நியமிக்கப்பெற்று நாடோறும் திருமுறைப் பாராயணம் நடைபெற்று வருகிறது. 19—5—80உ சேக்கிழார் சுவாமிகள் நினைவுநாளில் குன்றத்தூரிலும், தஞ்சை மாவட்டம் திருநாகேஸ்வரத்திலும் நண்பகலில் அன்னம் பாலிப்பு நடைபெறும்.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச்சுவை

நேரான வார்த்தை தரும் பொருள் அழுத்தத்தைச் சுற்றிவளைத்துச் சொல்லும் வார்த்தை தராது. 'அவன் நல்லவன்' என்று சொல்லும்போது பிறக்கும் தெளிவு 'அவன் கெட்டவன் அல்லன்' என்பதில் உண்டாவதில்லை. இன்னும் சொன்னால் 'கெட்டவன் அல்லன்' எனக்குறிப் பிடப் பெற்றவன் கெட்டவனுதலும் கூடும்; நல்லவனுத லும் கூடும்.

அந்நியம் என்றால் பேதம்; அநநியம் என்றால் அபேதம். இவை சமஸ்கிருதச் சொற்கள். இவை ஐக்யம், ஏகம் என்ற பொருள் தராதவை. அந்நியம் அநநியம் என்ற சொற்களை இதே பண்டார மும்மணிக்கோவை ஐந்தாம் திருப்பாட்டிலும் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் எடுத்தாண் டுள்ளார்கள்.

"அந்நியம் என்றும் அநநியம் என்றும்
இந்நிலை இரண்டும் எய்திற் றென்றும்
பல்வேறு உரைக்குநர் சொல்வழிப் படாது"

பிறநன்னெறி வேண்டும் என அங்கு நாமுய்ய வேண்டி யருளியுள்ளார்கள்.

இத்திருப் பாடலிலும் சுவாமிகள் இச்சொற்களைக் கையாளுகிறார்கள். பிரகுர்தி, நித்தியம், வியாபகம், ஸ்வ ரூபம், சக்தி ஆகிய ஐந்துவகைகளில் சீவனுக்கும் சிவனுக்கும் ஒப்புமை கூறியருளிய சுவாமிகள் இவையெல்லாம் எமக் கிருத்தலால் நாங்கள் (சீவன்கள்) உமக்கு அந்நியம் அலம்; அநநியம் என்கிறார்கள்.

இப்படிக் கூறியதால் சீவனும் சிவனும் ஒன்று என அவர்கள் வாதிடுகிறார்கள் எனக்கொள்ளக்கூடாது; தன்மை யால் வேறன்று என்றே கூறுகிறார்கள். நல்லவன் என்பதற்கும், கெட்டவன் அல்லன் என்பதற்கும் உள்ள வேறு பாடே இது!

"இங்கிலை முழுவதும் எமக்கும் உண்டாகலின்
அங்கியம்அலம் நினக்கு அநநியம் யாமே"

என்பது அப்பாடல் தொடர். ஒப்புமைகள் இருப்பினும் இரண்டும் ஒன்றேயாக முடியாது என்ற கருத்தை உணர்த்துதற்காகவே சுவாமிகள் இப்பாடலின் தொடக்கத்தில் 'ஒன்றே தன்மை' எனத்தொடங்கினுர்கள். அபேதம் பேத மற்றதே யல்லாமல் ஒன்றேயானது ஆகாது. அருளாள ராகிய சுவாமிகள் சொற்களை எச்சரிக்கையுடன் தீர்க்கமாகக் கையாளுவார்கள் என்பதற்கு இதுவும் ஒரு சான்றுகும்.

திருத்தருமை ஆதீனத்தின் ஆதி குருமுதல்வர் ஸ்ரீ குரு ஞானசம்பந்தர். அவர்தம் பிற்றேன்றல்களுள் ஒருவராக விளங்கியருளியவர்களே ஸ்ரீ மாசிலாமணிதேசிகர் அவர்கள் ஆவார்கள். அவர்களே நம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அவர்களுக்கு உபதேசகுருவாக விளங்கியருளியவர்கள். அவிச்சந்தான பரம்பரை என்னும் சாஸ்திரம் ஒட்டிய சம்பிரதாயப்படி குருமுதல்வரின் பிற்றேன்றல்கள் அனை வருமே குருமுதல்வர்கள் ஆகிறுர்கள். இவ்வகையில் தருமையில் அருட்செங்கோலோச்சி வருபவரை ஸ்ரீ மாசி லாமணிதேசிகர் என்று மட்டுமே கருதாமல் - அவரைக் குருநாதர் என்று மட்டுமே கருதாமல் அவரே குரு முதல்வர் என்று ஸ்ரீசுவாமிகள்உணர்ந்து-அறிவிக்கிறுர்கள். அதே நியா யப்படி குருமுதல்வருக்கும் அருள் உபதேசிகராகிய கமலை (திருவாரூர்) ஸ்ரீ ஞானப்பிரகாசருக்கும் ஸ்ரீ மாசிலாமணி தேசிகருக்கும் கூட வேறுபாடில்லை என்று சுவாமிகள் அறி வித்தருளுகிறுர்கள். அதனுலேயே

'தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும்
திருநக ராக அரசுவீற் றிருக்கும்
மாசி லாமணித் தேசிக ராய!'

என்று விளிக்கிறுர்கள். கூடல் - மதுரை. ஸ்ரீ குருஞான சம்பந்தரைக் குறிக்கக் கூடலைக் கூறியதன் காரணம், அத் திருநாளிலேதான் அவருக்கு அருள்ஞானச் சிவலிங்கத் திரு மேனி வழிபாட்டுக்குக் கிடைத்தது என்னும் வரலாற்றை யொட்டியது. தருமையாதீனக் குருமார்கள் அச் சொக்க லிங்கப் பெருமானையே தருமையில் வழிபாடு செய்கின்றனர் என்பதும் அறிதற்பாலதாகும்.

ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அவர்களே ஸ்ரீ குருஞான சம்பந்தரும் ஆவார்; அவரே ஸ்ரீ ஞானப்பிரகாசரும் ஆவார்; என விளக்கிய பின்னர் ஸ்ரீ சுவாமிகள் ஒரு நய மான செய்தியைத் தெரிவிக்கிறுர். ஞானசம்பந்தர் என்றுல் மிகுபேரறிவின் தொடர்பாளர் என்பது பொருள். "நாங்க

ளும் சம்பந்தர் ஆகையினுல் எம்முடன் சம்பந்தம் செய்து கொள்வது உமக்குத் தகுதியானதே'' என்று குருநாதரிடம் கூறுகிருர்கள்.

ஞானசம்பந்தர் என்பதுதான் குருமுதல்வரின் திரு நாமம்; இங்கே சம்பந்தர் என்று மட்டிலுமே குறிப்பதன் நோக்கமென்ன எனச் சிலர் கருதலாம். ஞானசம்பந்த என விளித்துத் 'தாங்கள் என்னுடன் சம்பந்தம் கொள்வது நும் பெயருக்குப் பொருத்தமானதே' எனக் கூறியிருந்தால் தம்மை - ஜீவர்களை ஞானமாகக் குறித்ததாகும். முன்னர்க் கூறிய ஐந்து ஒப்புமைகளுள்,

> ' அறிவெனப் பெயரிய பெயரினை அப்பெயர்
> பிறிவரும் பெயரெனப் பெற்றனம் யாமே'

எனக் குறித்திருப்பதைக் கவனிக்க வேண்டும். துலக்க வேண்டிய அறிவு - தூசுபடிந்த மாணிக்கக் கல்லைப் போன்ற அறிவு-ஜீவனுக்கு உரியது என முன்னர்க் குறித்த சுவாமிகள் இங்கே ஞானசம்பந்தர் என முழுப்பெயரைக் குறிக்காமல்

> ' சம்பந் தப்பெயர் தரிததமை யாலெமைச்
> சம்பந் தம்செயத் தகும்தகும் நினக்கே'

என்று கூறியதன் வாயிலாகப் பணிவுடைமையைப் புலப் படுத்துகிருர்கள். தகும் என்ற சொல் இருமுறை வருகிறது. தக்கவராகிய நுமக்கு இது தக்க செயல் என்பது கருத்து. இப்பாடலின் தொடக்கத்தில் 'உனக்கும் மற்று எமக்கும்' என்று கூறியதின் நயத்தையே 'எமைச் சம்பந்தம் செயத் தகும்' என்ற இடத்தும் கொள்ள வேண்டும்.

சிவ சிவ

---

உ
செந்திலாண்டவன் துணை

# ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்

## 292 - ஆம் ஆண்டு

# மகேசுவர பூஜைத் திருநாள்

ரெளத்ரி ஆண்டு வைகாசித் திங்கள் 19-ஆம் நாள்
ஞாயிற்றுக்கிழமை (1—6—80)

### ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் வரலாறு



ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் ஸ்ரீ வைகுண்டத்தில் அவதரித்தார்; திருச்செந்தூர் முருகப்பெருமான் அருளால் ஐந்தாவது ஆண்டில் ஊமை நீங்கிக் 'கந்தர்கலி வெண்பா'ப் பாடி அருள் பெற்ருர்; மதுரை மீனுட்சி அம்மைமீது 'பிள்ளைத்தமிழ்' பாடி அம்மையால் முத்தாரம் அணியப் பெற்ருர். திருமலை நாயக்க மன்னன் விருப்பத்திற்கிணங்க 'நீதிநெறி விளக்கம்' என்னும் நூலை அருளினுர்; தருமை ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை வழிபட்டு அவரை ஞான குருவாகக்கொண்டு 'பண்டார மும்மணிக்கோவை' பகர்ந்தார். ஆரூர், வேளூர், தில்லை தரிசித்துத் 'திருவாரூர் நான்மணிமாலை' 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்' 'சிதம்பர மும்மணிக் கோவை' முதலியன பாடினுர்; காசி சென்று 'சகலகலா வல்லி மாலை' 'காசிக்கலம்பகம்' முதலியன அருளினுர். சிங்கத்தின் மீதேறிச் சென்று முகலாய மன்னனைக் கண்டு அம்மன்னன் உதவியால் கேதார மந்திரம், கேதாரத்துறை, அறச்சாலை முதலியன அமைத்தார்; வெள்ளியம்பலவாணத் தம்பிரான் முதலியோருக்கு வித்யா குருவாகத் திகழ்ந்தார். செயற்கரிய செயல்கள் பலபுரிந்த குமரகுருபர முனிவர் பெருமானின் நினைவு உலகுக்குச் சிவநெறி காட்டி இன்பம் பயக்கும்.

உ
சிவ சிவ

திருப்பனந்தாளில் ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்
292 - ஆம் ஆண்டு

# மகேசுவர பூஜைத் திருநாள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21–வது அதிபர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்
திருவுளப்பாங்கின் வண்ணம் நடைபெறுவது

ரௌத்ரி ஆண்டு வைகாசித் திங்கள் 19-ஆம் நாள் (1-6-80) ஞாயிற்றுக்கிழமை முற்பகல் 9 மணி முதல் 10-30 வரையிலும், பிற்பகல் 4-மணி முதல் 6 வரையிலும்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவாகக் கருத்தரங்கு நடைபெறும்.

தலைவர் :

**திரு. கம்பன் அடிப்பொடி அவர்கள்**
பொதுப்பொருள்: வேளூர் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்

ஆய்வுரை அறிஞர்கள்:

**திரு. மு. அருணாசலம், அவர்கள்**
''பிள்ளைத் தமிழின் தோற்றமும் வளர்ச்சியும்''

வாகீச கலாநிதி **திரு. கி. வா. ஜகன்னாத அய்யர் அவர்கள்**
'' இலக்கியச் சுவை ''

மகாவித்துவான் **திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்**
" சமயத்திறன் "

பேராசிரியர்
**திரு. அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள்**
'' ஒப்பு நோக்கு ''

நண்பகலில் பூஜையும், மகேசுவர பூஜையும் நடைபெறும்.
அன்பர்கள் வந்து திருவருள் பெறுவாராகுக.

ஸ்ரீகாசிமடம்
திருப்பனந்தாள்
10—5—80.

ஆணைப்படி,
முத்து. மெய்கண்டதேவன்,
மானேசர்.

1980-ம் வருடம்

கீழ்க்கண்ட இடங்களுக்குத் தொகை அனுப்பப்பட்டுள்ளது.

ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு.

| | | | |
|---|---|---|---|
| வாரணாசி | 500 | உத்திரகோசமங்கை | 140 |
| ஷை பண்டாரா | 700 | திருவாடானை | 200 |
| பிரயாகை | 350 | பழனி | 285 |
| ஹரித்துவார் | 400 | திருப்பெருந்துறை | 140 |
| ரிஷிகேஷம் | 400 | ஆக்கூர் | 145 |
| திருக்கேதாரம் | 400 | மாயூரம் | 285 |
| இராமேஸ்வரம் | 500 | வைத்தீஸ்வரன்கோவில் | 200 |
| ஸ்ரீவைகுண்டம் | 360 | சீர்காழி | 140 |
| திருச்செந்தூர் | 140 | ஆச்சாள்புரம் | 300 |
| திருநெல்வேலி | 140 | திருப்பத்தூர் | 200 |
| பழைய பாபநாசம் | 140 | பேரூர் | 220 |
| திருக்குற்றாலம் | 300 | விராலிமலை | 140 |
| காஞ்சிபுரம் | 200 | திருவானைக்கா | 200 |
| திருக்கழுக்குன்றம் | 200 | அவிநாசி | 250 |
| திருக்கச்சூர் | 175 | திருப்பாண்டிக்கொடுமுடி | 250 |
| திருவொற்றியூர் | 140 | பவானி | 200 |
| திருத்தணி | 200 | திருவையாறு | 250 |
| காளஹஸ்தி | 200 | சுவாமிமலை | 200 |
| காவிரிப்பூம்பட்டினம் | 140 | கும்பகோணம் | 350 |
| திருவெண்காடு | 225 | திருவிசநல்லூர் | 200 |
| திருக்கடவூர் | 200 | கஞ்சனூர் | 200 |
| வேதாரண்யம் | 140 | திருவிடைமருதூர் | 140 |
| திருப்புகலூர் | 400 | திருவண்ணாமலை | 500 |
| திருவாரூர் | 200 | திருமாகறல் | 250 |
| நாகப்பட்டினம் | 250 | சென்னை | 150 |
| திருநள்ளாறு | 140 | வடதிருவாலங்காடு | 140 |
| காரைக்கால் | 175 | புதுடெல்லி | 140 |
| திருவீழிமிழலை | 150 | திருப்பாதிரிப்புலியூர் | 220 |
| மதுரை | 500 | விருத்தாசலம் | 300 |
| திருப்பரங்குன்றம் | 200 | திருக்கோவலூர் | 140 |
| சிதம்பரம் | 200 | ஆஸ்ராமம் | 200 |
| ஷை தில்லைவாழந்தணர் | 450 | திருஈங்கோய்மலை | 200 |
| கன்னியாகுமரி | 200 | திருப்பனந்தாள் | 5000 |

2—6—80உ வாரணாசி ஸ்ரீகுமாரசுவாமி மடத்தில் பண்டாரா சாதுக்கள்

# இறக்குமதி

தமிழாக்கம்: கோ. வன்மீகநாதன்

## 19. வெள்ளறிவுடைய ஆன்மாவை உணர்க.

ஞானத்தை நாட்டை விட்டுக கடத்துக,
அறிவைக் கைவடுக,
(இவ்வண்ணம் செய்தால்) மக்கள் நூறுமடங்கு
பயனடைவார்கள்.

மனிதாபிமானத்தை நாட்டை விட்டுக் கடத்துக,
நியர்யத்தைக் கைவிடுக,
மக்கள் தங்கள் உற்றூர் உறவினரின்
அன்பை மீண்டும் பெறுவார்கள்,

தந்திரத்தை நாட்டைவிட்டுக் கடத்துக,
பயனுடைமையைக் கைவிடுக,
திருடர்களும் கொள்ளைக்காரர்களும் ஒழிந்து விடுவார்கள்.
இவை மூன்றும் வெளியிலுள்ளனவற்றை மட்டுமே
தீண்டுதலாலும், இவை பேர் தராமையாயிருப்பதாலும்
தாம் நம்பிப்பற்றக் கூடியவை
மக்களுக்குத் தேவைப் படுகின்றன:

உன்னுடைய மாசற்ற வெள்ளறிவுடைய
ஆன்மாவைப் புலப்படுத்துக,
ஆதியிலிருந்த இயற்கையைத் தழுவுக,
உன்னுடைய சுயநலத்தன்மையைக்
கட்டுப்படுத்துக,
உன் ஆசைகளைக் குறைக்க-

---

உ

சிவ சிவ

# ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்

292 - ஆம் ஆண்டு

# மகேசுவர பூஜைத் திருநாள்

## மதுரையில் இன்னிசைத் திருமுறை விழா

திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்து அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**

அவர்கள் அருளாணையின் வண்ணம் நிகழ்த்தப் பெறுவது.

ரௌத்ரி ஆண்டு வைகாசி மாதம் 19ஆம் நாள் (1—6—80) ஞாயிற்றுக்கிழமை மதுரை ஸ்ரீ மீனாட்சி அம்மன் கோயில் விநாயகர் சந்நிதியில் இரவு 8மணிக்குத்தொடங்கிச் சிவம்பெருக்கும் பிள்ளையார் தங்கியருளிய ஆவணி மூல நான்கு வீதிகளில் இரவு முழுவதும் திருமுறைவாணர்கள் திருமுறையோதி, காலை 6 மணிக்கு ஸ்ரீ மீனாட்சியம்மை சன்னதியில் பூர்த்தி செய்வார்கள்.

**திருமுறை வாணர்கள் :-**

*சங்கீத பூஷணம், கலைமாமணி*

தருமபுரம், திரு. P. சாமிநாத முதலியார், சென்னை.

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்

**திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்,**

திருவாவடுதுறை,

தேவாரமணி திரு. S. சயிலப்ப ஓதுவார்,

*ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், மதுரை.*

தேவார இசைமணி திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்,

*ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார். திருச்சி.*

திருநெறிய தமிழ்மணி

திரு. த. குருசாமி தேசிகர், மதுரை.

திரு. N. ஆறுமுக தேசிகர், — வயலின், விழுதியூர்.

திரு. டி. ஆர். கிருஷ்ணன்,—பிடில், கும்பகோணம்.

திரு. கோ. வெங்கட்ராமன், மிருதங்கம், திருப்பனந்தாள்

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்
10—5—80.

ஆணைப்படி.
முத்து. மெய்கண்டதேவன்,
மானேசர்.

உ
சிவமயம்

# சிதம்பரச் செய்யுட்கோவை

A String of verses on Chidambaram
By Kumaragurupara Swamigal.
Translated into English by K, M. Venkataramiah.

— இருசீர் ஓரடி அம்போதரங்கம் —

பெரியைநீ சிறியைநீ பெண்ணும்நீ ஆணும்நீ
அரியைநீ எளியைநீ அறமும்நீ மறமும்நீ
விண்ணும்நீ மண்ணும்நீ வித்துநீ விளைவுநீ
பண்ணும்நீ பயனும்நீ பகையும்நீ உறவும்நீ

You are great — You are small
You are feminine — You are masculine
You are clear — You are simple
You are virtue — You are wrathful
You are the heaven — You are the earth
You are the seed — You are the produce
You are the melody — You are its pleasantness
You are the opponent — You are the Kindred.

எனவாங்கு ( தனிச்சொல் )

— சுரிதகம் —

கற்பனை கழன்றநின் பொற்கழல் இறைஞ்சுதும்
வெண்மதிக் கடவுள் மீமிசைத் தவழ்தரத்
தண்முகிற் குலங்கள் தாழ்வுறப் படிதலின்
செங்கால் அன்னமும் வெண்மருப்(பு) ஏனமும்
கீழ்மேல் துருவ ஆரழற் பிழம்பாய்
நின்றநின் தன்மையை உணர்த்தும்
பொன்திகழ் புலியூர் மன்றுகிழ வோனே.

Thus,
We shall worship Thine gold-like Fat which
is beyond lnventive genious;
The moon-god moving slowly up above,
The cool clouds massive moving downwards,
Seem as if,
The russety-webfooted swan and white horned
swine,
Going upward and passing far below,
And the Lord fising Himself as a large mass of fire,
O Master of the Golden Hall at Puliyur !*

---

* Chidambaram.

# விடையரங்கம்

**வினா :**

திருச்செந்தூர் முருகப்பெருமான் திருவருளால் ஊமை நீங்கப் பெற்ற ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அம்முருகப் பெருமானையே குருவாக ஏற்று உபதேசம் பெற முயற்சிக்காமல் தருமையாதீன ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை நாடிச்சென்றதின் நோக்கம் என்ன ?

— கி. ராஜவேல், காஞ்சிபுரம்

**விடை :**

கா. ம. வேங்கடராமையா
M. A. B. O. L.,

ஸ்ரீ குமரகுருபரர் தமக்கு உபதேசம் புரியவேண்டும் என்று ஸ்ரீ செந்திலாண்டவனை வேண்டிக் கொண்டார். ''நீ உத்தர யாத்திரை செல்லுங்கால் யார் வினவுக்கு வாக்குத் தடைபடுமோ அவரையே குருவாகக் கொள்க'' என அசரீரி கேட்டது. அவ்வணமே மதுரை. திருவாரூர் முதலிய தலங்களைத் தரிசித்துக் கொண்டு ஸ்ரீ குமரகுருபரர் தருமபுரம் சார்ந்தார்; அங்கு ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், ''ஐந்து பேரறிவும்'' என்ற பாடலின் அனுபவப் பொருளைக் கூறுக எனப் பணித்தருளினர். ஸ்ரீ குமரகுருபரருக்கு வாக்குத் தடைபட்டது—என்பது வரலாறு. செந்திலாண்டவன் பணித்தவண்ணமே ஸ்ரீ குமரகுருபரர் குருவை நாடிச் சென்றூர் என்பது அறியற் பாலதாகும். இது பற்றிய மேற்கோள் — ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் புராணம் — திருச்செந்தில் சேர் படலம் — 73 ஆவது பாடல் பின்வருமாறு:

குருவடிவாய் வந்துனருள்
பெறுமடியேன் சிரமீதுன்
குலத்தாள் வைத்து
மருவுபதே சம்புரிந்து
நூல்விதியா லினித்தீக்கை
வகுத்தல் வேண்டும்
முருகவெனத் துதித்திட நீ
உத்தர யாத்திரை செல்ல
முயலுங் காலை
ஒருவர்வினு வுக்குன் விடை
தடைபடுமேல் குருவவராய்
உவந்து கொள்வாய் (73)
அவர்பா லுன் கருத்துமுற்றப்
பெறுதியெனத் திருவாக்கங்
ககல் விசும்பில்
நவமாகக் கேட்டுவந்து.....(74)

அ. ச. ஞானசம்பந்தன் M. A.,

இறைவன் திருவருள் இன்ன வழியில்தான் வர வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. வித்தையினுல் சிறப்புற்றிருந்த குமரகுருபரர்க்கு குமரகுருபரன் குருவாக அமைந்திருந்தால் அவருடைய இத்துணை நூல்கள்

வெளிவராமல் அல்லவா இருந்திருக்கும். சும்மா இருக்கின்ற சுகத்தை அப் பெருமான் அருளியிருப்பின் நாமன்றோ நஷ்டம் அடைவோம். எனவேதான் தமிழ் நெறியின் நற்காலம் பிற்காலக் கம்பனைஉருவாக்கவேண்டி மானிட குருவாகிய மாசிலாமணியிடம் அனுப்பியது.

க. வச்சிரவேல் முதலியார்

திருமுருகன் திருவருள் பெற்றுராயினும், அனுபவ ஞானம் வம்பது சம்பிரதாயம் எனப்படும் திருக்கயிலாய பரம்பரையில் வந்த அருளாசிரியனால்தான் விளங்கத்தக்கது என உலகம் அறிந்து உய்தற் பொருட்டு அவர்தம் உள்ளம் அவ்வாறு நாடிற்று. எனவே கொள்ளத்தக்கது.

Dr. டி. பி. சித்தலிங்கையா M. A.

வினு அமைப்பே சரியாக இல்லை. ''அடிகள் முருகப்பெருமானையே குருவாக ஏற்று உபதேசம் பெற முயற்சிக்காமல்'' — என்று இருக்கிறது. முருகனைத் தெய்வமாகத்தான் ஏற்கமுடியும். குருவாக அல்ல. தெய்வம், தானுகவே குருவாக வரத் திருவுள்ளம் கொள்ளும். இறைவன், மனிதர்களுக்கு ஞானம் புகட்ட பல்வேறு வழிகளை மேற்கொள்கிறுன். தானுகவே குருவாக வருவது (மாணிக்கவாசகர் வாழ்க்கையில் நிகழ்ந்தது போல) வேறு வழியில் ஞானம் புகட்டுவது (திருஞானசம்பந்தருக்கு ஞானப்பால் தந்தது போல) முதலிய பல்வேறு வழிகளில் ஆட்கொள்கிறுன், 'ஆட்பாலவர்க்கருளும் வண்கணமும் ஆதி மாண்பும் கேட்பின் புகில் அளவில்லை கிளக்க வேண்டா'—என்று திருஞானசம்பந்தர் இதனைக் குறிப்பிடுகிறுர். திருச்செந்தூர் முருகன் குமரகுருபர அடிகளுக்குத் தருமையாதீனக் குருமணி மூலம் ஞானம் புகட்டக் கருதினுன். அடிகள் தருமை சென்றபோது குருவினைத் தேடிச்சென்றதாக வரலாறில்லை. மாசிலாமணி தேசிகர் தாமே 'தலையளித்தாட் கொண்டார்'. 'குருவே சிவமெனக் கூறினன் நந்தி' என்பது திருமந்திரம். எனவே குருவேறு இறைவன்வேறு எனக்கொள்ளல் கூடாது. இறைவனே அந்தக் குருவின் வடிவில் எழுந்தருளுகிறுன் என்று கொள்வதே சரி.

ந. ரா. முருகவேள் M. A.,

குமரகுருபரசுவாமிகள், திருச்செந்தூர் முருகனின் திருவருள் பெற்று ஊமைத்தன்மை நீங்கியவராயினும், தருமையாதீன மாசிலாமணி தேசிகரை நாடிச் சென்றதும் அம்முருகனின் திருவருட் குறிப்பேயாகும். ''எங்கு எவர்முன் நின்வாக்கு தடைப்படுகின்றதோ, அங்கு அவரையே நீ குருவாகக் கொள்ளுக'' என்று முருகன் குமரகுருபரர்க்குப் பணித்ததாக வரலாறு கூறுகின்றது. ''குருவாய் வருவாய் அருள்வாய் குகனே'' என அருணகிரிநாதர் வேண்டியிருப்பதற்கு

ஏற்ப, முருகன் தன் அடியவர்களுக்கு நேரில் தானே போந்து திருவருள் புரியாமல், ஒரு குருவின் வாயிலாகவே அருள்புவது அவனது இயல்பாலாம்! "தம் முதல், குருவுமாய்த் தவத்தினில் உணர்த்துவான்" என்பது சிவ ஞானபோதம். இறைவனின் அருளை நேரே பெறுதலைக் காட்டிலும். குருவின் வாயிலாகப் பெறுவதே சிறப்பாகும் என்பது, அருளாளர்கள் அனைவரின் கருத்தாகத் தெரிகின்றது.

"முற்றும் இறைசெயலே
முற்றிடினும், தன்அருளைப்
பெற்றவர்தம் பாலே
பெரிதாகும்,; — பற்றுபெரும்
தாபத் திடத்தே
தழன்றிடினும், நற்சோதி
தீபத் திடத்தே சிறப்பு"

எனவரும் செய்யுளும், இவ்வுண்மையைச் செவ்விதின் வலியுறுத்தும். அதுபற்றியே, குமரகுருபரர் தருமையாதீன மாசிலாமணிதேசிகரை நாடிச் செல்வாராயினர்.

**கம்பன் அடிப்பொடி**

செந்திற் பெருமான் அருளால் ஊமைத்தன்மை நீங்கப்பெற்ற குமரகுருபரர் அவனருளாலேயே தருமை மாசிலாமணி தேசிகரை நாடிச்சென்று குருவாக அடைந்தார். உலகில் அவதரித்தவர்கள் யாராயினும் ஒரு குரு முகமாகவே உபதேசம் பெற்று உய்ய வேண்டும். அதுவே உலகியல் நியதி. இராமனுக அவதரித்த திருமாலே வசிட்டர், விசுவாமித்திரர் ஆகியோரைக் குருவாகக் கொண்டமை சிந்திக்கத் தக்கதாகும்.

மகா வித்துவான்
**சி. அருணைவடிவேல் முதலியார்**

'உபதேசம்' என்பது பல இடங்களில் சென்று மாதிரி பார்த்து, ஓரிடத்தில் தேர்ந்தெடுத்துக் கொள்வதன்று. ஆகையால் ஸ்ரீ குமரகுருபர அடிகள் முருகனுடைய உபதேசத்தை விடுத்து ஏதோ ஒரு நோக்கத்துடன் "தருமையாதீனத்திற்குச் செல்ல வேண்டும்" என்று எண்ணிச் சென்றாரல்லர்.

"ஆட்பா லவர்க்கு அருளும்
வண்ணமும் ஆதிமாண்பும்
கேட்பான் புகில் அளவில்லை"

என்பது தான் இவ்வினுவிற்கு விடை.

அடிகளுக்கு ஊமையை நீக்கிக் கல்வி ஞானம் கைவரச் செய்த திருச்செந்தூர் முருகன், அனுபவ ஞானத்தையும் அப்பொழுதே அவருக்கு ஏன் அருளவில்லை? என்று நாம் வினுவ முடியாது. அதற்குக் காரணத்தை அவன் ஒருவனே அறிவான்.

மேலும், 'ஞானம்' என்பது 'பெறவேண்டிய சமயத்தில் பெற்றுக்கொள்வோம்' என்று தள்ளிவைக்கப் படுவதும் அன்று. அதற்குரிய ஒரு காலம் வர அப்பொழுதே அது பெற்றுக் கொள்ளப் படுவதுதான். ஆகையால் அந்தக் காலம் அடிகள் தருமையாதீனத்திற்குச் சென்று ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை தரிசித்த காலத்தில் உண்டாக அவரால் அடிகள் அதனைப் பெற்ருர்.

அதுவும் அந்தத் திருச்செந்தூர் முருகன் திருவருள் குறிப்பே; என் பதுதான் உண்மை. அம்முருகப் பெருமான் அத்திருச்செந்தூரிலே 'உனது வாக்குத்தடைபடும் இடத்தில் உனக்கு ஞானேபதேசம் கிடைக்கும்' என்று அருள்புரிந்தான் என்ற வரலாறும் உண்டு.

**கி. வா. ஜகந்நாதன் M.A.,**

இறைவன் திருவருளால் குமர குருபரருக்கு ஊமைத்தன்மை நீங்கினுலும் மெய்ஞ்ஞானம் பெறுவதற்குக் குருவின் திருவருள் வேண்டும். ஆதலின் அவர் தருமையாதீன ஞானசிரியரிடத்தில் உபதேசம் பெற்றுர். குருவின் பெருமையை வற்புறுத்தவே இந்த நிகழ்ச்சி அமைந்தது.

சி. குமாரஸ்வாமி
செந்திலடிமை.

ஸ்ரீ குமரகுருபரர் முருகனையே குருவாக இருந்தருளும்படி வேண்டுகிறுர். இதில் சிறிதும் ஐயமில்லை. இதற்கு ஆதாரம் கந்தர்கலி வெண்பா, கண்ணி 115 முதல் 122 முடிய:-

116 " ... ... ... விரிகிரணம்
சிந்தப்புனைந்த திருமுடிகள்
ஓராறும்
A எந்தத்திசையும் எதிர்தோன்ற—
[1]வந்திடுக்கண்
எல்லாம் பொடிபடுத்தி
[2]எவ்வரமும் தந்து புகுந்து
B உல்லாசமாக உளத்திருந்து —
[3]பல்விதமாம்
ஆசுமுதல் நாற்கவியும்
அட்டாவ[4]தானமும் [5]சீர்ப்
பேசுமியல் பல்காப்பியத்
தொகையும் — [6]ஓசை
எழுத்து முதலாம் ஐந்
திலக்கணமும் தோய்ந்து
பழுத்த [7]தமிழ்ப்புலமை
பாலித்து —[8]ஒழுக்கமுடன்
இம்மைப் பிறப்பில்
[9]இருவாதனை அகற்றி
மும்மைப்[10] பெருமலங்கள்
மோசித்துத் — தம்மை
விடுத்து
ஆயும் பழைய
[11]அடியாருடன் கூட்டித்
தோயும் பர[12]போகம்
துய்ப்பித்துச் — சேய
122 கடியேற்கும் பூங்கமலக்
[13]கால்காட்டி [14]ஆட்
கொண்டு
C அடியேற்கு முன்னின்று அருள்"
ஸ்ரீ குமரகுருபரருக்குத்
தேவையானவை 14

இந்த 14-லும் முருகன் குருவாக இருந்தால்தான் கிட்டும் எனத்தெரிந்தே (A B C) முருகனிடமே வேண்டுகோள் விடுக்கிறுர்,

A. எந்தத்திசையும்எதிர்தேன்றவந்து

B. உல்லாசமாக உளத்திருந்து

C. அடியேற்கு முன்னின்று அருள்

இந்த மூன்றில் அடங்கிவிட்டது, "நீ குருவாய்வருவாய் அருள்வாய் குகனே" என்பது. இதுவே சரியான பொருள். இது எனது தாழ்மையான கருத்து.

பின் ஏன் மாசிலாமணி தேசிகரை நாடினுர்? இது, முருகன் ஸ்ரீ குமரகுருபரருக்கு அருளிய குறிப்பு. "நீ அங்கே செல் அங்கு நீ கேட்டதெல்லாம் கிடைக்கும்" என்பது அக்குறிப்பு.

எனவே ஸ்ரீ குமரகுருபரர், ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை நாடினர். அதன் பயன் நமக்கு "அருள் பழுத்த கனிச்சுவை" (பண்டார மும்மணிக்கோவை) கிடைத்தது. சுவைக்கிறோம்.

மேலும், முருகன் குருவாக வந்து உபதேசித்தது மூவர்க்கே. அவர்கள் இவர்கள் :-

1. தேவஸ்ரேஷ்டர் - பரம சிவன்
2. முனிஸ்ரேஷ்டர் – அகத்திய முனிவர்
3. நரஸ்ரேஷ்டர் - ஸ்ரீ அருண கிரிநாதர்.

நெல்லை சிவமணி
புலவர் ம. சிவசம்பு பி. லிட்.

முருகப்பெருமானிடம் அருள் பெற்றவர்கள் பலர். அவனைக் குருவாகக் கொண்டு பிரணவ மந்திரம் உபதேசம் பெற்றவர்கள் மூன்றே பேர்தான்.

1, சிவபெருமான்
2. அகத்தியர்
3. அருணகிரிநாதர்

அருணகிரிநாதர் "குருவாய் வருவாய் அருள்வாய்குகனே" என்று வேண்டிக் கொண்டார். முருகன் அருணகிரி நாதருக்கும் சுவாமி மலையில் பிரணவ மந்திரத்தை உபதேசித்தான்; பழநியில் ஜெபமாலை கொடுத்தான். இறைவன் மானிடச் சட்டை தாங்கிப் பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்குக் குருவடிவாகி அருள்புரிவான்.

மாணிக்கவாசகருக்குத் திருப்பெருந்துறையில் திருக்குருந்தடியில் இறைவன் குருமணியாக வந்து அருள் புரிந்தான்.

"அருபரத் தொருவன்
அவனியில் வந்து
குருபரனாகி அருளிய
பெருமையை"
திருவகவல் 75 /76.

என்று கூறுகிறார்.

நமது குமரகுருபர சுவாமிகளும் கந்தர் கலிவெண்பாவில்

'கருணை திருவுருவாய்க்
காசினிக்கே தோன்றிக்
குருபரன் என்(று) ஓர்
திருப்பேர் கொண்டு'
வரிகள் 24.

என்று அருளுகிறார்.

கந்தர் கலிவெண்பாவின் இறுதியில் அருள்வழி நின்று இறைவன் உண்மையை ஆராய்கின்ற பழைய அடியவர்களின் கூட்டத்தில் என்னையும் சேர்த்து அவ்வடியவர்கள் அனுபவிக்கின்ற பேரின்பத்தை நானும் அனுபவிக்கச் செய்து திருவடி தரிசனம் தந்து ஆட்கொள்ள வேண்டும் என்று வேண்டுகின்றார்.

"ஆயும் பழைய அடியாருடன்
கூட்டித்
தோயும் பரபோகம் துய்ப்பித்துச் —
சேய
கடியேற்கும் பூங்கமலக்
கால்காட்டி ஆட்கொண்டு
ஆடியேற்கு முன்னின்று அருள்"

வேண்டுவோர் வேண்டுவதே ஈவானாகிய முருகன் பதிபசுபாசம்

ஆயும் கமலை ஞானப்பிரகாசர் மெய்த்தொண்டர்களுள் குமர குருபரரைச் சேர்த்தார். ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிகரை குருவாகக் கொண்டார். அவர் முருகனிடம் கேட்டதுகிடைத்தது

முருகன் அருள் பெற்றதால் அவரையே குருவாகக் கொள்ள வேண்டும் என்ற நியதி இல்லை.

தருமையாதீனம் குருமுதல்வர் குருஞான சம்பந்தருக்குச் சொக்க லிங்கப் பெருமான் கரத்தில் எழுந்தருளி, விண்ணும் பரவிடும் அற்புதம்செய்தான். அவர் பூசை நடைமுறைகளை அறிய அருள் செய்ய வேண்டினர். சொக்கலிங் கப் பெருமான் அவர் கனவில் கமலை ஞானப்பிரகாசரைக் குரு வாகக் கொள்ள அருள் பாலித் தான். அவரையே குருவாகக் கொண்டார்.

தருமையாதீன வரலாற்றில் கூறப்படும் செய்தி :

ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணிதேசிகரின் அருட்பெருக்கைக் கேட்ட தத் துவ ஞானியாகிய ஸ்ரீமத் குமர குருபர சுவாமிகள் மகா சந்நிதா னத்தைத் தரிசித்தார். அப் பொழுது அங்கு பெரியபுராண ஆய்வு நடந்து கொண்டிருந்தது. தில்லையில் நடராசப் பெருமானை சுந்தரமூர்த்தி சுவாமிகள் தரிசித்த காட்சியை விளக்கிக் கொண்டிருந்தார்கள்.

ஐந்துபே ரறிவுங் கண்களே
கொள்ள
அளப்பருங் கரணங்கள்
நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு
மூன்றுந்
திருந்து சாத்து விகமே யாக
இந்துவாழ் சடையான் ஆடும்
ஆனந்த
எல்லையில் தனிப்பெருங்
கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள்
திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில்
மலர்ந்தார்.

இந்த அற்புதச் செய்யுளுக்குத் திவ்வியம் பழுத்த சைவ சித் தாந்தச் செல்வராய குமரகுருபர ரிடம் அனுபவப்பயன் உரைக்கச் சொன்னர்கள். அடிகளார்திகைத் தனர். ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அவருக்கு அனுபவப் பொருளை உபதேசித்து ஆட் கொண்டார்.

இதன் அருமையை ஸ்ரீகுமர குருபரர் பண்டார மும்மணிக் கோவையில்

'நான்மறைக் கிழவ
நற்றவ முதல்வ
நூன் முறை பயின்ற
நுண்மைசா லறிஞ
சொற்சுவை பழுத்த
தொகைத்தமிழ்க் கவிஞ
கற்றவர் வியக்குங்
காவியப் புலவ
செவிதொறுஞ் செவிதொறுந்
தெள்ளமு தூட்டுபு
கவிவயி னிரப்புங்
கவிப்பிர சங்க
வெள்ளிடைத் தோன்ரு
துள்ளத் துணர்த்தவுஞ்
சேய்நிலை நின்று
திருக்கண் சார்த்தவுஞ்
சாயா மும்மலச்
சகலரே முய்ய
எம்முருக் கொண்டு
எம்மொடு பயின்று
மும்மலக் கிழங்கை
முதலொடு மகழ்ந்து
சிற்பர முணர்த்துஞ்
சற்குரராய'
பண்டார மும்மணிக்கோவை
19—1—12.

என்று கூறியுள்ளதாகத் தருமை யாதீனம் 25 வது குருமகா சந்நி தானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் அடிக்கடி கூறி மகிழ்விப்பார்கள்.

# நூல் நிறை

## ஸ்ரீ ஜய சுப்பிரமணிய சுவாமி அந்தாதி

[ஆசிரியர் – வித்யாரத்ன கலைமாமணி கற்பகக் கவியரசு ஸ்ரீ சுத்த சத்வானந்தா (என். எஸ். சிதம்பரம்) பக்கங்கள்-20 விலை ரூ. 1-00
கிடைக்குமிடம் : 14, சிங்காரி நாயக்கன் தெரு, மயிலாப்பூர்
சென்னை – 600 004]

மயிலாப்பூரில் உள்ள அருள்மிகு அப்பர் சுவாமி ஆலயத்தில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள ஸ்ரீ ஜயசுப்பிரமணிய சுவாமி மீது பாடப்பெற்றுள்ள அந்தாதி நூல். இது கட்டளைக் கலித்துறை களாலாகியது. பக்திச்சுவை சொட்டச் சொட்டப் பாடப்பெற்றுள்ள இப்பாடல்கள் நூலாசிரியரின் இலக்கியப் புலமையையும், செய்யுள் இயற்றும் வன்மையையும் காட்டுவனவாகவுள்ளன. 'மொழித்துணை நீயே முருகா' (47) 'காட்ட நீ காண்பேன்' (49) முதலான பாடல்கள் நூலாசிரியரின் இலக்கியப் பயிற்சியையும், 'பதி பசு, பாசம்' (50) முதலான சில பாடல்கள் நூலாசிரியரின் சித்தாந்தத் தோய்வையும் காட்டுவன. நூலின் இறுதியில் 'சுப்பிரமணியர்' மீது நூலாசிரியரால் பாடப்பெற்றுள்ள இரண்டு கீர்த்தனைகள் அச்சிடப் பெற்றுள்ளன.

திருவாரூர் நால்வர் நானமணி மாலை

# -: இரு சுவடுகள் :-

கி. வா. ஜகந்நாதன்

விநாயகப் பெருமானேடு திருவாரூர்த் தியாகேசர் கொஞ்சி விளையாடுகிறார். அந்த யானை முகப்பெருமான் இறைவர் மேலே ஏறித் துகைத்தும் முட்டியும் மோதியும் சிறுகுறும்புசெய்கிறார்.

இறைவர் தம் திருமேனியில் யானைத்தோலைப் போர்த்திருக்கிறார். கஜாசுரனைச் சங்கரித்து அவன் தோலை உரித்து அதையே மேலாடையாகப் புனைந்திருக்கிறார். ஆணவத்தை யானையாகச் சொல்வது வழக்கம். ஆணவத்தைப் போக்கும் பெருமான் என்பதைக் காட்டுவது அந்த யானைத் தோல்.

யானைத்தோலை மேலே போர்த்துக்கொண்டு விளங்கும் போது பெருமானைப் பார்த்தால் அவர் யானையைப் போலவே தோற்றம் அளிக்கிறார். விநாயகப் பெருமானுக்கும் அந்தத் தோற்றம் தெரிகிறது. ''இந்தயானை இங்கே எங்கே வந்தது'' என்று எண்ணி அவருக்குக்கோபம் மூள்கிறது.

களிற்று உரிவை
மீதுஒன்று வகண்டு வெங்கோப
மாமுகன்.

உடனே, இந்த யானையை நாம் ஓட்டவேண்டும் என்று எண்ணி விநாயகர் மோதித் தம் இரண்டு கொம்பாலும் அந்தத் தோலின் மேல் குத்துகிறார். அதனால் இறைவருடைய திருமார்பில் இரண்டு சுவடுகள் உண்டாகின்றன.

'இது இங்கே வந்து அடுவதற்காக வந்த களிறோ?' என்று எண்ணி எதிரே பாய்ந்து தம்முடைய வெள்ளையான தந்தங்களால் குத்தினாலும் குழந்தையின் விளையாட்டாக அதை ஏற்றுக் கொள்கிறார் தியாகேசப் பெருமான். குஞ்சு மிதித்துக் கோழி முடமாகுமா? ''மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம்'' என்று வள்ளுவர் சொல்கிறார் அல்லவா?

வெண்மருப்பால்
ஈது ஒன்று அடுகளிறு என்று எதிர்
பாய்ந்த இணைச்சுவடே.

விநாயகப் பெருமான் தம்முடைய கொம்புகளால் உண்டாக்கிய அந்த இரண்டு சுவடுகளும் தியாகேசர் திருமார்பில் தோன்றுகின்றன. அவற்றை அன்பர்கள்பார்க்கிறார்கள், அவர்களுக்கு விநாயகக் குழந்தை செய்த சுவடுஎன்று தெரியவில்லை.

சோலைகள் குளிர்ச்சியைத்தந்து விளங்குவது கமலாலயமாகிய

திருவாரூர். அந்தச் சோலைகளில் மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. அத்தகைய கமலையில் நித்திய வாசம் செய்கிறார் ஈசர். அவருடைய பொன் வண்ணத் திருமார்பில் இந்தச் சுவடுகள் எப்படி உண்டாயின என்று அன்பர்கள் சிந்திக்கிறார்கள்.

அவர்கள் கற்பனை வேறு விதமாகச் செல்கிறது; ''இப்படித்தான் இருக்கவேண்டும்'' என்று அவர்களுடைய ஊகம் படர்கிறது.

எம்முடைய அன்னையாகிய உமாதேவி இறைவருடன் இணைந்து அளவளாவுகிறாள்; அவரைத்தழுவி இன்புறுகின்றாள். அந்தப் பெருமாட்டி என்றும் கன்னியாக, தளராத நகில்களை உடையவளாக இருப்பவள். அந்த நகில்கள் சூதாடும் காய்களைப் போலத் தோற்றம் அளிக்கின்றன.

அன்னை இறைவரைத் தழுவிக் களிக்கும்போது அப்பெருமாட்டியின் நகில்கள் பெருமானுடைய திருமார்பில் அழுந்திப் பதிகின்றன. அதனால் அங்கே சுவடுகள் உண்டாகின்றன. இரண்டு நகில்களும் அழுந்துவதனால் சுவடுகளும் இரண்டாகப் பதிகின்றன.

விநாயகப் பெருமானுடைய தந்தங்கள் பட்ட சுவடு என்பதை அறியாமல், அன்பர்கள், 'எம் பெருமாட்டி தழுவியபோது உண்டான நகிற் சுவடுகள் இவை' என்று எண்ணுகிறார்கள். இறைவர் இறைவியின் நகில் தழும்பை உடையவர் என்பதைக் காஞ்சி புரத்தில் தெரிந்து கொள்ளலாம்.

அந்த வரலாற்றை அறிந்த அன்பர்கள் இந்தச் சுவடு இறைவியின் நகில் தழும்பு என்று சொல்லிக் கொள்கிறார்கள்; 'மக்கள் ஆணும் பெண்ணுமாக இணைந்து அன்பு செய்து இன்புற்று வாழவேண்டும் என்று இறைவர் நமக்கு அறிவிக்கும் அருமைத் திருவிளையாடல் என்று எண்ணி மகிழ்கிறார்கள்.

போதுஒன் றியதண் பொழில்கம
லேசர்பொன் மார்பில் எம தாய்
சூதுஒன்று கொங்கைச் சுவடுஎன்
பரால்.

இறைவர் கஜாசுரனைச் சங்காரம் செய்தது அவருடைய பராக்கிரமத்தைக் காட்டியது. அது வீரச்செயல். இறைவியோடு ஒன்றி அளவளாவுவது அவளுடைய இன்பத் திருவிளையாடல், அது ஈரச்செயல். குளிர்ந்த பொழில் சூழ்ந்த திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் கமலேசர் தோற்றத்தில் இப்போது ஈரத்தையே காதலையே காணுகிறார்கள் அன்பர்கள்.

போதுஒன் றியதண் பொழிற்கம
லேசர்பொன் மார்பில்எம்தாய்
சூதுஒன்று கொங்கைச் சுவடுஎன்ப
ரால்,தொல் களிற்றுஉரிவை
மீதுஒன் றுவகண்டு வெங்கோப
மாமுகன் வெண்மருப்பால்
ஈதுஒன்று அடுகளிறு என்றுஎதிர்
பாய்ந்த இணைச்சுவடே.

* பழங்காலத்தில் இறைவர் கஜாசுரனை அழித்துப் போர்த்த

அந்தப்பழைய யானைத் தோல் அவர்மீது பொருந்தியிருப்பதைக் கண்டு, மிக்க கோபத்தையுடைய யானைமாமுகனாகிய விநாயகன், இது அடவந்த ஒரு களிறு என்று எண்ணி எதிரே பாய்ந்து தன் வெண்மையான இரண்டு தந்தங்களால் உண்டாக்கிய இரட்டைச் சுவடுகளை, மலர்கள் செறிந்த குளிர்ச்சியான சோலைகளையுடைய கமலாலயத்தில் உள்ள தியாகேசர் திருமார்பில் எம்முடைய தாயாகிய உமாதேவியின் சூதாடும் காய்களைப்போன்ற தனங்களின் தழும்பு என்று அன்பர்கள் சொல்வார்கள்.

[பொன் மார்பில் - பொன் வண்ணம் பெற்ற திருமார்பில், பொன்-பொலிவு என்றும் கொள்ளலாம். எம் தாய் - எம் அன்னையாகிய உமாதேவி. சூது - சூதாடும் காய்; ஆகுபெயர். ஒன்று; உவம வாசகம். என்பர் – என்று அன்பர்கள் கூறுவார்கள். அன்பர் என்பது தோன்றா எழுவாய். ஆல் : அசை.

பழங்காலத்தில் நிகழ்ந்ததாதலின் தொல்களிறு என்றார். மீது-தியாகேசர் திருமேனியின் மீது. ஒன்றுவ - பொலிந்திருத்தலை. மாமுகன் யானைமுகனாகிய விநாயகன். வேறு ஒருகளிறு இங்கே வந்ததோ என்ற எண்ணத்தால் கோபம் வந்தது. ஈது - இங்கே தோன்றும் இது. அடுகளிறு – அடவந்த களிறு. பாய்ந்த சுவடு - பாய்ந்ததனால் உண்டான சுவடுகள். இரண்டு தந்தங்களும் பதிந்ததனால் இரண்டு சுவடுகள் உண்டாயின. இணைச்சுவடு - இரண்டு சுவடுகள். ஏ. அசை. இணைச்சுவடு கொங்கைச்சுவடு என்பர். பொலிவுபெற்றதிருமார்பு ஆதலின் அதுகண்டு அம்மை ஆரத்தழுவினாள் என்று எண்ணினர் அன்பர்.]

திருவாரூர் நான்மணிமாலையில் அமைந்த ஏழாவது பாடல் இது,

---

# திருப்பணி கொள்ளும் திருநாகேச்சரம்

திருநாகேச்சரம், சேக்கிழாருக்குத் திருவடிஞானம் நல்கிய திருத்தலம்; ஆன்மார்த்த தலம்; அவரது திருப்பணி பெற்ற தலம். சம்பந்தசுவாமிகளும், அப்பரடிகளும் வழிபட்டுத் தேவாரப் பாமாலை சூட்டப்பெற்ற இத்திருத்தலத் திருக்கோயில் பல லட்சம் செலவில் திருப்பணிகள் செய்யப்பெற்றுக் கும்பாபிஷேகம் செய்விக்கப்பெறவுள்ளது,

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள்** அவர்களைப் புரவலராகவும். திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களைத் தலைவராகவும் கொண்ட திருப்பணிக்குழு அமைந்துள்ளது.

மெய்யன்பர்களின் காணிக்கைகள் வரவேற்கப்படுகின்றன.

அனுப்பவேண்டிய முகவரி:—

செயல் அலுவலர்,
ஸ்ரீநாகநாத சுவாமி திருக்கோயில்,
திருநாகேச்சரம், (தஞ்சை மாவட்டம்.)

---

உ

சிவ சிவ

# தில்லையில்

# பெரிய புராணச் சொற்பொழிவுகள்



திருப்பனந்தாள், ஸ்ரீகாசிமடத்து அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்கள் அருளாணையின் வண்ணம்

தில்லைத் தமிழ் மன்றத்தாரால் நடத்தப் பெறுவது.

நிகழும் ரௌத்ரி ஆண்டு வைகாசித் திங்கள் 5 ஆம் நாள் முதல் 13 ஆம் நாள் முடிய (18—5—80 to 26—5—80) தில்லையில் பெரிய புராணச் சொற்பொழிவுகள் நிகழ்ச்சி நிரலிற் காணும் வண்ணம் சிதம்பரம் கனகசபை நகர் தருமையாதீனத் திருமடத்தில் நாடொறும் இரவு 7-மணி முதல் 8-30 வரை நிகழும்.

விரிவுரை நிகழ்த்துவோர்:

1. திரு. அகரமுதல்வன் M. A., அவர்கள் — 18–5–80 முதல் 20–5–80 முடிய
2. மகாவித்துவான், திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்கள் 21–5–80 முதல் 23–5–80 முடிய
3. வித்துவான், திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள் 24–5–80 முதல் 26–5–80 முடிய

அன்பர்கள் கேட்டு இன்புறுவார்களாக.

கனகசபைநகர்
சிதம்பரம்
10–5–80

ஆணைப்படி,
S. திருநாவுக்கரசு.
தில்லைத் தமிழ் மன்றம்.

நிகழ்ச்சி நிரல்:-

திரு. அகரமுதல்வன் M. A. அவர்கள்

1. 18–5–80 ஞாயிறு திருமலைச் சருக்கம்

2. 19–5–80 திங்கள் தில்லை வாழந்தணர் சருக்கம்

3. 20–5–80 செவ்வாய் இலை மலிந்த சருக்கம்

மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்கள்

4. 21–5–80 புதன் மும்மையால் உலகாண்ட சருக்கம்

5. 22–5–80 வியாழன் திருநின்ற சருக்கம்

6. 23–5–80 வெள்ளி வம்பறு வரிவண்டு சருக்கம்
(திருஞானசம்பந்தர் புராணம்)

வித்துவான் திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள்

7. 24–5–80 சனி ஏயர்கோன் முதல் சோமாசி முடிய

8. 25–5–80 ஞாயிறு வார்கொண்ட வன முலையாள் சருக்கம்

9. 26–5–80 திங்கள் எஞ்சிய ஆறு சருக்கங்கள்.

நமச்சிவாய வாழ்க ! நாதன் தாள் வாழ்க !

---

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள் - 4

பல்வலிக்கு

(அ) சுக்கு துண்டு ஒன்றை வாயில் போட்டு மென்றுவர பல்வலி, ஈறு வலி நிற்கும்.

காதுவலிக்கு

(ஆ) கிராம்பை நன்ருகப் பொடிசெய்து அதன் தூளைத் தண்ணீரில் கலக்கித் தண்ணீர் நன்ருகத் தெளிந்தவுடன் அதைக் காதில் 2 சொட்டு விட காதுவலி நிற்கும்.

கபம், நெஞ்சுசளிக்கு

(இ) கல்யாண முருங்கை இலையை அடைசெய்து சாப்பிட கபம், நெஞ்சுசளி குணமாகும்.

மஞ்சட்காமாலைக்கு

(ஈ) கீழ்காய் நெல்லியைத் தண்ணீர் விடாமல் நன்ருக அரைத்து சார் எடுத்து அதைத் தேன் அல்லது வெள்ளை முள்ளங்கி சாருடன் கலந்து காலை, மாலை, மூன்று நாட்களுக்குச் சாப்பிட குணமாகும்.

டாக்டர். N. சடையப்பன்.

---

# மதிநுதலும் - பிறைமதியும்

ச. தண்டபாணி தேசிகர்

இமயமலையிலிருந்து இறங்கி வருகின்ற கங்கைப் பெரு வெள்ளத் திற்கு மேடு ஏது ? பள்ளம் ஏது? எல்லாம் சமம். அது போலத்தான் அங்கயற் கண்ணியின் அருளுக்கும்.

அருள்பெருக்கெடுத்து ஆன்மாக்கள் மீதுபாயுமானல் இந்த ஆன்மா இழிந்தது; இது உயர்ந்தது. என்ற வேறுபாடு பார்த்தா பாயும் ? அப்படியே அம்மை மலைமேற் பிறந்தேன் மலைமீதுதான் இருப்பேன்; காட்டிலிருக்க மாட்டேன் என்பாளா! வாழ்வதும் ஆட்சி புரிவதும் கடம்பவனக் காட்டில் தானே. எல்லாரும் நாட்டிலிருந்து காட்டை ஆளுவார்கள். அம்மையோ காட்டிலிருந்து உலகம் முழுவதையுமே ஆளுகிருள் ஆதலால் அன்னைக்கு எல்லாம் சமம்.

சந்திரன் மகாபாவி; அவன் செய்யாத பாவங்களே இல்லை. 'பகை பாவம் அச்சம் பழி என இந்நான்கும் இகவாவாம் இல்லிறப்பான் கண்' என்ருனே வள்ளுவன். அந்த ஆணையையும் மீறிக் குரு பன்னியைக் கூடி இத்தனை பாவங்களையும் தேடிக் கொண்டவன், எவன் ஒழுக்கக் கேடுடையவனே அவன் ஒளி மட்டுமா குறைகிறது. உடலில் கயரோகம் பற்றுகிறது. மலையாயிருந்தவனும் துரும்பா யிளைப்பான் அத்தகையன் என்பதையறிந்திருந்தும் அம்மை பரம கருணையால் இவனுடைய மண்டல மத்தியிலிருந்து உலகிற்கே உதவுகி ருள்என்று மார்க்கண்டேய புராணத்து ஸ்ரீலலிதா சகஸ்ரநாமத்து ஒரு மந்திரம் "சந்திர மண்டல மத்யகாயை நம:" என்கிறது. இவ்வண்ணம் இவள் இருப்பதை நமது சந்தனுசாரிய பரம்பரையில் வந்த குமரகுருபர சுவாமிகள் கற்பனைத்தேனிலே குழைத்து அம்மை யின் திருவடிகள் சந்திரனுடைய இதயத்தடத்தும் பொலிகின்றன'' என்றருளிச் செய்கின்ருர்கள்.

இத்திருவடிகள் எங்கே விளங்குவன தெரியுமா? மிக மிக உயர்ந்த இடம். ஞானப்பெருவெளி. அந்த ஞானப்பெருவெளி ஏட்டிலே எழுதப்பெருது உணர்வு மயமாக இறைவன் திருவுள்ளத்து வீற்றிருந்து அவனருளைப் பெற்ற தெய்வ இருடியர் சிந்தையில் ஊறிச் சுரந்து உலகுக்குபகாரமாக ஒலி எழுத்தாகி இருடிகள் வாயிலாகத் தோன் றிய உபநிடதங்கள் என்ற ஞானபூமியிலே அரசாட்சி செய்து கொண் டிருக்கின்றன. அத்திருவடிகள் உயர்வற உயர்ந்த ஒளிமயமான ஞான பூமியில் உறைந்த திருவடிகள் இந்தச் சந்திரனுடைய உள்ளத் தடாகத்திலும் மலர்ந்துள்ளன.

உலக காரணனுகிய இறைவன் இவனே எடுத்துச் சிரத்திற் சூடிக் காத்தனர். அது ஏன் தெரியுமா? எல்லாரும் எண்ணுவார்கள்; அவன் சாபம் பெற்றுன்; சரணுகதியடைந்தான் . சாபத்தை நீக்கத் தரித்தான் என்று. இதனுல் என்ன பெறப்படுகிறது; அவனுடைய தாழ்வெனுந்தன்மையே அவனேச் சிவசம்பந்தமுடைய சைவனுக்கியது என்பது. உண்மையதுவல்ல. அவனும் அப்படித்தான் எண்ணிக் கொண்டிருக்கிறுன்.

உயிர்களின் உணர்வு ஒருவகை விசித்திரமானது. தன்குறையைத் தான் உணராதது மட்டுமின்றித் தனக்கு வந்த பேறுகள் அனைத்தும் எப்படி வந்தன? இவற்றிற்கு எல்லாம் பரம காரணன் யார்? என்பதையும் உணர்வது இல்லே. இந்தக் குறையைப் பயன் படுத்திக் கொண்டு எத்தனேயோ உயிர்கள் உயருகின்றன.

மலருக்கு மணமும் கனிக்குச் சுவையும் கொடுத்தது யார்? மண்ணு? நீரா? இவற்றைக் கருவியாகக் கொண்டு புவன போகங்களேப் படைத்துப் போகங்களே அருந்தி அனுபவிக்கச் செய்யும் சிவ கருணேபடைத்தது.இதனேத் திருவுளம் பற்றியே 'சிவன் தந்தது என்று கொள்ளாக் குலாமருக்கு என் சொல்வேன் கச்சி ஏகம்பனே' என்று உலகினரை உள்ளத்திலடைத்து மனமிரங்குகிறுர் குபேர சம்பத்தில் வாழ்ந்த பட்டினத்தடிகள்.

இங்ஙனம் எண்ண அலேகளிற் சிக்கிய செவிலி 'இந்தமதி இவ்வளவு சொல்லியும் அம்மையின் அருளாணேக்கு அடங்காதிருப்பது தன்னறிவின் முதிர்ச்சியால் பெரிய இடத்தைச்சார்ந்து விட்டோம், நமக்கு நிகர் யார்? என்று எண்ணி இறுமாக்கிறுன் போலும் என்று எண்ணுகிறுள். சொல்கிறுள் 'ஏ! கெட்டமதியே! நீ நினேத்துக் கொண்டிருக்கிறுய் 'பஞ்சகிருத்திய பரனுன பரசிவத்தின் தலேயிலே ஏறி விட்டோம் ;அது நமக்குள்ள தனித்தகுதி. இது,வரை யாரும் எய்தாத பேறு. அதுமட்டுமா! இயல்பாகவே புனிதமானதும், உயிர்களின் பாவங்களேக் கழுவிக் கழுவிப் புனிதமாக்குவதுமான சடைக்கங்கையோடு நெருங்கிப் பழகுகிறேம் இவையனேத்தும் நமக்கேயுள்ள பூர்வ புண்ணிய விசேடங்கள்' என்று.

யோசித்துச்சொல்; நன்ருகச் சிந்தித்துச்சொல் சீகண்ட பரமசிவம் உன்னே ஏன் தலேயில் வைத்திருக்கிறுர் தெரியுமா ? சொல்கிறேன் கேள்; நீ ஒரு மண்டலந்தான், உன் மண்டலத்திலே உனக்கு ஆட்சி கிடையாது. அங்கே மண்டல மத்தியிலிருந்து ஆளுபவள் பராசக்தி.

உன்னுடைய மனம் ஒருதாமரைத் தடாகம்; அதிலே அன்னையின் அருள் ஞானமயமாகிய திருவடித்தாமரைகள் மலர்ந்திருக்கின்றன. அன்னையின் மேல் வைத்துள்ள அருட்காதலால், எப்போதோ ஒரொருகால் ஊடற்காலத்தே திருவடியைத் தீண்டுகிற நமது சிரம் எப்போதும் தீண்டி இன்பத்தை எய்துவதெப்படி? போகி யாயிருந்து உயிர்க்குப் போகத்தை நல்குவது எப்படி? என்று திருவுளத்திலே எண்ணிக்கொண்டிருந்த போது, நீ வந்தாய்; சரணுகதியடைந்தாய். பருத்தி புடைவையாய்க் காய்த்தது என்று எண்ணினர் பரமசிவன். உன்னைத் தலையில் தூக்கிவைத்தார். இந்த இரகசியம் உனக்குத் தெரியுமா? தெரியத்தான் முடியுமா?

அவரோ ஒரு கபட நாடகம் நடிப்பவர். ஆனந்தக்கூத்தாடு கிறேன் என்பார். படைத்தலாதி ஐந்துதொழிலும் நடந்து கொண்டேயிருக்கும். அவர் எந்தக்காரியத்தை எப்போது எதற்காகச் செய்கிருர் என்பதை யாராலும் அறியமுடியாது. ஞானிகளே அறி யார்கள். அப்படியிருக்க உனக்கு எப்படித் தெரியப்போகிறது. அன்னை யின் அடிமலரைச் சிரத்தால் அனவரதமும் தீண்டவேண்டியே இவர் இப்படிச் செய்தார் என்ருல், அவள் அருளை நீ நேரே பெற்று விட்டால் அப்புறம் சொல்லவா வேண்டும்.

இலேசாக எண்ணிவிடாதே! எங்கள் அன்னை மதுரைத் திரு மகள். உன்னை நயங்காட்டியும் பயங்காட்டியும் ஒன்பதுமுறை அழைத்தேன். நீ திருந்தவில்லை; தெளியவும் இல்லை. சிவனருளால் இருவினை ஒப்பும் மலபரிபாகமும் சக்தி-நிபாதமும் நேர இருந்த போது அதைக்கை நழுவவிட்டு, பந்தச் சேற்றில் சிக்கிய ஆன் மாவைப் போல அலட்சியப் படுத்துகிருய். போனது போகட்டும், இது பத்தாவது முறை. இதுதான் கடைசி வார்த்தை.

அன்னையிருக்கட்டும். அன்னைவாழ்கின்ற இம்மதுரை மாநகரத் திலே இருக்கின்ற வெண்கடம்பு, கோங்கு முதலிய மரங்களே கலையைச் சுவைத்துப் பரிசுகள் கொடுக்கின்றன.

பெண்கள் யாழ் வாசிக்கிருர்கள். யாழொலியோடு மிடற்ருெலி யும் கலந்து இது யாழ் ஒலி இது மிடற்ருெலி என்று பெரிய புத்தி சாலியும் வேறுபிரித்து உணரமுடியாத வண்ணம் இழைந்து ஒலிக் கின்றன. கேட்டமரவமாகிய வெண்கடம்பு ஆடைகளைப் பரிசளிக் கிறது. கோங்கமரம் குதூகலம் தாங்கமுடியாமல் பொற்கிழியையே அவிழ்த்துக் கொட்டுகிறது. மரமும் கலையுணரும் தமிழ் மதுரைக்கு

அரசி இவள். கலைத்தெய்வம். நீயும் ஒரு கலைஞன். வந்தால் யாரும் பெருத பரிசு உனக்கும் கிடைக்கும். ஆதலால் 'ஆணிப்பொன் வல்லிபுணர் மாணிக்க வல்லியுடன் ஆடவா' என்று அழைத்து அமைதியுறுகிருள் செவிலி.

இவ்வண்ணம் அம்புலியை மையமாகக் கொண்டு, குழந்தையுள்ளத்தைத் திறந்து பார்ப்பது போல, சிவபரத்துவம், சிவகருணை, சிவ சரித்திரங்கள், சுத்தாத்துவித சித்தாந்தக் கருத்துக்கள் இவற்றை உணர்கிருேம்.

இங்ஙனம் நிலைகாண இயலாத புலமைக்கும் - கற்பனைக்கும் - செஞ்சொற்கவியின்பத்திற்கும், செந்திற்குமரன் திருவருளுக்கும் இலட்சியப் பொருளான ஆதி குமரகுருபர சுவாமிகள் வாயிலாக வழிந்த அம்புலிப்பருவம் 'புலியாகக் கிலியை விளைவிக்காமல்' கரும்பைத் தேனைக் கட்டியை ஒத்திருந்ததை உணர்ந்தோம். நாமும் அம்மையின் அருளார் ஆனந்த வாரிதியில் மூழ்கி இரண்டற - ஒன்றுமற என்றும் இன்பம் பெருக இருப்போமாக.

ஏடகத் தெழுதாத வேதச் சிரத்தர(சு)
இருக்குமிவள் சீறடிகள்நின்

இதயத் தடத்தும் பொலிந்தவா திருவுளத்து
எண்ணியன் றேகபடமா

நாடகத்(து) ஐந்தொழில் நடத்தும் பிரான்தெய்வ
நதியொடு முடித்தல் பெற்ருய்

நங்கையிவள் திருவுள மகிழ்ச்சிபெறின் இதுபோலொர்
நற்றவப் பேறில்லை காண்

மாடகக் கடைதிரித் தின்னரம் பார்த்துகிர்
வடிம்புதை வருமற்றலார்

மகரயாழ் மழலைக்கும் அரவங்கள் நுண்டுகில்
வழங்கக் கொழுங்கோங்கு தூங்கு

ஆடகப் பொற்கிழி அவிழ்க்குமது ரைத்திருவொ(டு)
அம்புலீ ஆடவாவே

ஆணிப்பொன் வல்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

— மீனுட்சி அம்மை பிள்ளைத்தமிழ், அம்புலிப்பருவம் 10.




ஐயா,

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால், புரந்தருளப் பெற்று வரும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியில் சென்னைப் பல்கலைக்கழகப் பிலிட் (B Lit.,) பட்டப்படிப்புத் தொடங்கி, கடந்த ஐந்தாண்டுகளாக நடைபெற்று வருகிறது. இப்பட்டப் படிப்பில் தேர்ச்சி பெற்றோர், முதுகலை (M.A., தமிழ்) | B.G.L, / B.L,, B Ed., ஆகிய பட்டங்களைப் பெற வாய்ப்புளது. வரும் 1980-81 முதல் மூன்றாண்டு பட்டப் படிப்பாக அமையப் பெற்று அதற்குரிய வகுப்புத்தொடங்க உள்ளது. இப்படிப்பிற்குச் சங்ககாலம் முதல் இக்காலம் வரையுள்ள இலக்கண இலக்கியங்களும், வரலாறு, கலை, பண்பாடு, கல்வெட்டு, சைவ சித்தாந்த சாத்திரம் ஆகிய நுண்கலைநூல்களும் பாடமாக உள்ளன. நல்ல தமிழார்வமும், பண்பாடும் உடைய மாணவர்கள் இருப்பின் உடன் விண்ணப்பிக்கச் செய்ய விரும்புகிறேன். மேல் நிலை வகுப்பில் (Higher Secondary) தேர்ச்சி பெற்றோரும் P. U. C. யில் தேர்ச்சி பெற்றோரும் இவ்வகுப்பில் சேரத் தகுதி உடையராவர். கலைக்கல்லூரியில் B.A,, பட்டப்படிப்புக்கு உரிய பயிற்றுநிலைக் (Tution Fees) கட்டணமும் உரிய பிற சிறப்புக் கட்டணங்களும் கட்டப் பெறுதல் வேண்டும். பிற்பட்ட, தாழ்த்தபட்ட வகுப்பினர்களுக்கு இக்கட்டணங்களில் சலுகைபெற அரசாங்கம் அனுமதித்துள்ளது. உணவும், தங்குமிடமும் தங்கள் சொந்தப் பொறுப்பில் அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். நல்லொழுக்கமும் தமிழார்வமும், இறைபக்தியும் உடையோர் இப்பட்டப்படிப்பில் தேர்ச்சி பெற்றால் வருங்காலத்தில் தமிழும், சைவ சித்தாந்த நுண்ணறிவும் பெருகும் என்பதில் ஐயமில்லை. தக்கவர்களை அனுப்பிவைக்க வேண்டுகிறேன். விண்ணப்பம் பெற ரூபாய் இரண்டைப் பணவிடைமூலம் அனுப்புவதுடன், போதிய அஞ்சல் தலையொட்டிய தம்முகவரி எழுதிய உறையுள் ஒன்றையும் அனுப்பி வைக்கச் செய்யவும்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி ;–
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி,
திருப்பனந்தாள். 612504,
தஞ்சை மாவட்டம்

தங்களன்புள்ள,
கு. சுந்தரமூர்த்தி

# திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பாவந்தாதி

ஆசிரியர் : வித்துவான் தியாகராச செட்டியார்

தாதாநீ யேநின்பாற் சார்ந்திரப்போன் யானுவந்து
நீதாவென் றேனென்னை நீக்கினு—லோதுகொடை
மன்றெங்குக் காட்டுவாய் மாதேவா வொற்றியூ
ருற்றபர மாபுகலே தோ. 56

ஓவென் றலறி யொளியடியேன் கண்ணிற்குத்
தாவென்றே னீதிரத்த ருனன்ரூே—வேவினு
னென்றுசினந் தொன்றுரையா யேர்ப்பரவை யார்மனைக்கேன்
சென்ருய் கமலையமு தே. 57

தேவர்பர வொற்றியூர்ச் செல்வாநின் செஞ்செவிக்கண்
மூவர்தமி ழோடியான் மொழிபுன்சொற்—பாவும்
புகுமேயா ழோசையொடு புன்மா ஞெலியு
நகுமே யதனு ணயந்து. 58

நயந்துகே ளுயே னவிலொருவின் ணப்பம்
பயந்தவிர நின்பேர் பரித்தேன்—வயங்காரு
ரெந்தாயான் கண்ணிழந்தே ஞென்ருலி யாவர்க்குந்
தந்தாய்நீ கண்ணிழந்தாய் தான். 59

தானக் களிற்றின் றலைமே லுலாப்போதும்
வானத் திறைபிரமன் மால்வாழ்வு—மேனத்தின்
கோடணிந்த வொற்றியூர்க் கோமானின் றெண்டுசெயும்
பாடணிந்த வாழ்விற்கொப் பா. 60

பாடக்கண் பாவலர்க்குப் பண்டுதந்தா யின்றுன்னை
நாடக்கண் ணுயேற்கு நன்குதவி—னீடுன்
புகழ்புதிதா மாரூர்ப் புனிதா வஃதன்றி
யிகழ்பவரே யாரு மிலர். 61

இல்லை யெனவிரந்தார்க் கீயாமை புண்ணியமோ
கொல்லை விடையூருங் குழகனே — நல்லை
யெனவுரைப்பார் நிற்கின்றே வீசனே யொற்றிப்
பனவனே யித்துவக்கும் பண்பு. 62

பண்புடையெந் தாய்நாவற் பாவலற்குத் தோழமைகொ
ணண்புடையா னென்றுவிழி நல்கிருய் — நண்புடையே
னல்லே னெனினு மடிமையா ளூரூர்வாழ்
நல்லா யெனக்கும்விழி நல்கு. 63

நல்குரவெஞ் ஞான்று நணுகாது நால்வர்க்குச்
சொல்குரவு பூண்ட சுடர்மதியான் — பல்குரவு
பாவைதரு மொற்றிப் பரமன் புகழ்பாடு
நாவையுடை யார்பா னயந்து. 64

நயனங் களிக்க நடனஞ்செய் நாதா
பயனங்கை வைத்த பரமா — வியனஞ்ச
முண்டவா ரூரா வுறுநோ யொழித்தென்னைக்
கண்டுகொள னிற்கே கடன், 65

கடனஞ் சமுதாக்கக் கற்ருய் தமியே
னுடனன் சனநோ யொழிக்க — விடையோனே
கல்லா யெனிலென் கரைவாய்தென் னெற்றிவாழ்
மல்லாயெல் லாம்வல்ல வா. 66

வாயே யுனக்கிதன்மேல் வாழ்வென்றென் ருரூர்வாழ்
தாயே யனைத்துயிர்க்குந் தந்தையே — நாயேனைக்
காப்பாய் கருணைக் கடலேயென் றின்றமிழாற்
பாப்பாடிற் போமே படர். 67

படவரவத் தோடுபுலிப் பாதனுங்கண் டேத்த
நடவரவங் காட்டுகழ னம்பன் — றடமதில்சூ
ழொற்றியூர் மேவு மொருவற் பணிந்தேத்தும்
பற்றுளார்க் குண்டோ பயம். 68

பயன்மதியஞ் சென்னி பரித்தாய்வெற் பீன்ற
கயல்விழியோர் பாகங் கலந்தாய் — வியனூர்க்
கம்பிக்கா தாகருணை காட்டியே நாயேனை
நம்பிக்கா தாநன் னலம். 69

நலமொன் றுனக்குரைப்பே னன்னெஞ்சே கேட்டி
பிலமொன் றரவணிந்த பெம்மான் — கலமொன்று
வாரிசூ ழொற்றியூர் வாழ்வான் பெருங்கருணை
நாரிபா கன்கழலே நம்பு. 70

நம்பினே னுன்னை நழுவவிடேல் வெந்நோயால்
வெம்பினேன் வீதி விடங்கனே — தும்பிக்
கரத்தோனே யானுமொரு கான்முளைமண் ணுண்ட
சரத்தோ யருள்கமலே சா. 71

சார்ந்தோர்ப் புரக்குந் தயாநிதிநீ யேயெனமுற்
றோர்ந்தோர் சொலல்கேட் டுனையடைந்தேன் — வார்ந்தமலைச்
சாபாதென் னெற்றிநா டாகமுன் கூடலிலே
மாபாவி யைப்புரந்த வா. 72

வாழ்வுனக்கீ சன்புகழை வார்த்தலே வன்னெஞ்சே
தாழ்வுனக்கன் னேன்புகழைச் சாற்றுமை — யேழ்புவியும்
போற்றுங் கமலைப் புராணனைவாய் வந்தபடி
சாற்றுதி யீதுனக்குத் தான். 73

தானே தனக்குச் சரியாநின் றுண்மலர்க்கி
யானே சரண மடைந்தடிமை — யானே
னினியென் செயினுஞ்செ யெம்பெருமா னின்பங்
கனியொற்றி யூர்ச்சங் கரா. 74

காரவாய் மதலைவரக் கண்டாய்தென் னூரூர்ப்
பிரானேயாற் றிட்டசெழும் பீதம் — பராவக்
குளத்துவரச் செய்தாய் கொடியேன்கண் டந்தால்
வளத்தவையோ டொன்றுமம் மா. 75

மாதேவா வொற்றியூர் வள்ளா லடியார்செய்
கோதே கொளாதகுணக் குன்றமே — சூதேய்
முலையா ளமர்பாகா முன்னவா தீயே
னுலையா தருளை யுதவு. 76

உதரஞ் சுமந்த வுலகளந்தோன் மார்பத்
ததரஞ் சிவந்தா ளகலாக் — குதர
நிகர்மா ளிகையாரூர் நின்மலா வென்று
பகர்வார்துன் போடும் பறந்து. 77

பறவையூர் தேவர் பரவும் புனிதா
நறவையார் கொன்றையணி நாதா — வுறவை
யடையார் புரஞ்செற்ற வண்ணாவென் னெற்றி
யுடையா யெனையா ளுவந்து. 78

உவந்தால முண்டமரா ரூர்புரந்த நம்பா
தவந்தானஞ் சற்றேனுஞ் சாரேன் — சிவந்தால
மன்னயமன் றோன்றி லறியேனு ரூரரசே
உன்னையன்றி வேறுதுணை யொன்று. 79

ஒன்றுபுகல் வேனன் றுணர்நெஞ்சே நீயுனக்கு
நன்று புரிதற்கு நாடினல் — வன்றிறன்மா
வேறுடையா னெற்றியூ ரெம்மான்றன் சென்னிமிசை
யாறுடையான் சீரையே யாய். 80

ஆடரவக் கிண்கிணிக்கா லையா பிறையோடு
சூடரவச் செஞ்சடையாய் தொண்டர்சீர் — பாடரவ
மோவாத் திருவாரூ ருத்தமா நாயேனைக்
காவாமை நன்றோ கழறு. 81

கழல்பணியக் கல்லார் கருதுபுகழ் சொல்லார்
விழலுக் கிறைத்தே விளிவார் — குழன்மொழியாள்
வாமத்தான் திங்கள் வளர்சடையான் பொன்னிதழித்
தாமத்தா னென்றிநகர் சார்ந்து. 82

துன்பமெலா நீத்தோஞ் சுடுநோ யறத்துறந்தோ
மின்பமெலா மெய்த வினித்தடையெ — னன்ப
குளத்தான்றென் னூரர்வா ழும்பர்பிரா னஞ்சார்
களத்தான் புகழ்நாக் கலந்து. 83

களத்தி லபய வரதங் கலந்தாய்
சிரத்திற் சிரமாலை சேர்த்தாய் — வரத்தை
யருளாயஞ் சேலென் றடியேனுக் கென்னே
தெருளாளா வொற்றியர சே. 84

சேலேந்தி னன்றியத் தித்த பழிதீர
வேலேந்தி னனை விதித்தவழற் — பாலவிழிப்
பித்தன் கமலைப் பிரானெதனுற் றீர்ப்பானே
பத்தற் கருளாப் பழி. 85

# கந்தர் கலிவெண்பாவுள் சமயம்

## மு. அருணாசலம்

தொகுதி 1. பகுதி 5-இன் தொடர்ச்சி.

## புறப் புறச் சமயம்

### சமய விளக்கம் I :

இனி, மேற்கூறியவாறு நான்காகப் பகுக்கப்பட்ட சமயத் தொகுதிகளில் ஒவ்வொன்றிலும் ஆறு ஆக, சைவ சாத்திரங்களுள் சொல்லப்பட்ட சயங்கள் இருபத்து நான்கு. இவற்றைச் சிறிதளவு கீழே விளக்கி உரைப்போம். முதலாவது புறப் புறச் சமயங்களான ஆறு. இவற்றைக் கூறுகின்ற நூல்கள் சிவஞான சித்தியாரும், தத்துவப்பிரகாசமும் ஆகும். சித்திபரபக்கம் பரசமயங்களை மட்டும் 301 பாடல்களால் கூறுகிறது. 338 பாடல்களைக் கொண்ட தத்துவப் பிரகாசமும் தன்விரிந்த போக்கில், ஞானத்தில் ஞானம் என்ற பகுதியில் 74 பாடல்களால் 56 சமயங்களின் மதமும் மறுப்பும் கூறுகிறது. 24 என்ற சமயத் தொகுதி இங்கு 56 என்று விரிக்கப்பட்டுள்ளது. முதலில் இந்நூலாசிரியர் புறச்சமயம் 24 அகச்சமயம் 24 என்று பெயர்களைச் சொல்லி ஒவ்வொன்றாக எடுத்துரைத்து மறுக்கிறார். மதமும் மறுப்பும் சுருக்கம், புறச்சமயம் என்ற பெயரில் இவர் புறப்புறம் எட்டாகவும் புறச்சமயம் பதினாறாகவும் கூறுகிறார். இவற்றை அவ்வவ்விடங்களில் விளக்கியுரைப்போம்.

### 1. உலகாயதம் :

காட்சி அளவை ஒன்றே பிரமாணமாக உடையது இந்து மதம். இம்மதத்தினருக்குப் பூதங்கள், நிலம், நீர், தீ, வளி என நான்கே, ஆகாசம் இல்லை. உடம்புக்கு வேறே உயிர் என்பது பொய், வினை பொய், கடவுள் இல்லை. இம்மையில் மகளிரை மணந்து வாழ்வது துறக்க இன்பம். வறுமையால் துன்புறுவது நிரயத்துன்பம். பூதக் கூட்டரவின் பிராணவாயு நீங்கினால் உடம்பு நாசம். அதுவே வீடு பேறு. தானம் கற்பு முதலியன இவருக்கு நூல். உலகாயதருள் தேகான்மவாதி இந்திரியான்மவாதி பிராணான்மவாதி அந்தக்கரணான்மவாதி எனப் பலதிறப்படுவர்.

உலகாயதன் மதம், மறுதலை இரண்டையும் சித்தியார் 21, 42 பாடல்களால் எடுத்தியம்புகிறது. இது மிகவும் விரிவு. இதனால்

உலகாயதத்தை விரிவாகவே கண்டிக்க வேண்டியிருந்தது, அக்கால நிலைமை என்பதை உணரலாம்.

## சாருவாகம் :

இது உலகாயதத்தில் பேதம். சுரர்குரு தன் மகளை மணுளன் நீத்தது காரணமாக உண்டாக்கிய நூலும் மதமும் சாருவாகம். இதற்கும் உலகாயதத்திற்கும் சிறப்பான வேற்றுமை இல்லை. பூதங்களே தெய்வம், இந்திரனே தலைவன். மகளிர் இன்பமே முத்தி, தேகமே ஆன்மா என்பது சாருவாகம் என்றும் சொல்லலாம். இதில் மிச்சிரசாருவாகம் இரணிய கர்ப்ப சாருவாகம் என இருபிரிவுகள் உள்ளன.

உலகாயதம் சாருவாகம் இரண்டின் மதம் மறுப்பைத்தத்துவப் பிரகாசரே இரண்டிரண்டு பாடல்களால் சொல்லுகிறுர்.

## பௌத்தம் :

சைவசித்தாந்திகள் கருத்தின்படி கடவுள் இல்லை என்று சொல்லுகின்ற சமயங்கள் உலகாயதம் பௌத்தம் ஆருகதம். பௌத்தத்தை நான்கு பிரிவாக எண்ணி, புறச்சமயம் ஆறு என்பது கணக்கு. புத்தர் காலம் கி.மு. 563—483. பௌத்த மதத்தின் முதல் நிலை ஹீனயானம், தேரவாதமும் வைபாடிகமும், சௌத்திராந்திகமும் இதைச் சேர்ந்ததே. இரண்டாம் நிலை மாத்தியமிசம். மூன்ரும் நிலை யோகாசாரம். பிந்திய இரண்டும் மகாயானத்தைச் சேர்ந்தவை. தமிழ் மரபில் சௌத்திராந்திகமே விரிவான இடம் பெறுகிறது.

உலகத்துப் பிறந்து இறந்து உழன்று சிலம் முதலியவற்ருன் நல் உணர்வு தோன்றி முழுதும் உணர்ந்து முத்திபெற்றுத் தன்னைப்போல் பிறரும் உணர்ந்து உய்தற்பொருட்டுக் கருணையினுல் பிடகநூல் செய்தவன் புத்தக்கடவுள்; அந்நூலில் கூறும் பொருள்களாவன ஞானமே ஆன்மா எனப்படும்; அது நீரோட்டம் போலச் சந்தானமாய்க் கணந்தோறும் தோன்றி அழியும்; அங்ஙனம் தோன்றி அழியுங்கால் மான்மத நாற்றம்போல முற்கணத்தின் அழிவெய்தும். ஞானத்தில் தோன்றிய வாசனை, பிற்கணத்தில் தோன்றும் ஞானத்தில் பற்றுதலான் அறிவு முதலாயின நிகழும்; மற்றும் உள்பொருளெனப்பட்டவை எல்லாங்கணந்தோறும் தோன்றி அழியும்; இந்த ஞானத்தில் தோன்றிய வாசனை அழிவதே முத்தி என்பது ஆகும்.

இந்து சமயப் பிரிவுகள் யாவும் பௌத்தத்தை நான்கு பிரிவுகளாகக் கொண்டே பூர்வபட்சம் செய்கின்றன. ஆரம்ப பௌத்

தத்தை இவை கருதுவதில்லை. தேரல்வைசாலியில் கி. மு. 2-ம் நூற்றுண்டுக்கு முன்னர் ஒரு சங்கம் கூட்டினர். இவர்களுடைய கொள்கை சர்வாஸ்திவாதம். ஆனுல் இவற்றைப் பின்வந்த இந்து விமர்சனக்காரர் கொள்வதில்லை. அவர்கள் கொண்டு மறுப்பதெல்லாம் ஹீனயானக் கொள்கையான சர்வாஸ்தி வாதத்தை உடன்படுகிற வைபாடிகத்தையும், ஸௌத்திராந்திகத்தையும். பின்வந்தோர் மகாயானக் காரரான யோகாச்சாரரும், மாத்யமிக்கரும், யோகாசாரர் லட்சிய வாதிகள் மாத்யமிக்கர் சர்வ வைஞசிகர் என்றும் சொல்லப்பெறுவர். புத்தர் பரிநிர்வாணம் அடைந்தபின் 3 நூருண்டு கழித்து வைபாடிகம் தோன்றிற்று. 4 நூருண்டு கழித்து ஸௌத்திராந்திகம் தோன்றிற்று. 5 நூருண்டு கழித்து மாத்தியமிகம் தோன்றிற்று. யோகாசாரம் என்ற பிரிவை நிறுவியவர் அசங்கர் என்பவராவர். அவர் காலம் கி. பி. 3–ம் நூற்ருண்டு.

## 2. வைபாடிகம் :- (வைபாஷிகம்)

இவர்கள் அபிதர்மபிடக நூலின் விரிவுரை அல்லது விபாஷையை பின்பற்றுபவர்களாதலால் வைபாடிகர். (விபாஷை — மாறுகோள் உரை) இவர்கள் சூத்திரங்களை ஏற்பதில்லை. சுண்ணும்பும் மஞ்சளும் கூடிச்சிவப்பாவதுபோல, அவயவங்களும் போதமும் கூடியபொழுது ஆய்வு தோன்றும். இப்படிக் காண்பதே பொருளென்று இம் மதம் கூறும். காட்சிப் பொருளே உண்மை என்பது இவர்கள் கொள்கை; இதுவே சர்வாஸ்திவாதம். இவர்களுக்கு ஆகாசம் இல்லை. பிற நான்கு பூதங்களுமே உள்ளன. அறிவினும் (விஞ்ஞானம்) சித்தத்தினும்வேருக ஆன்மா என்பதில்லை, புத்தரும் ஒரு சாமான்ய மனிதரே. உண்மையில் அவர் தாமாகக் கண்டதொன்றே அவரிடம் காணப்பெற்ற தெய்வாம்சம்.

## 3. ஸௌத்திராந்திகம் :

ஸௌத்திராந்திகத்தையே தமிழ் நூல்கள் விரிவாகக் கூறும். சிவஞானசித்தியார் இம்மதத்தை 31 பாடல்களாலும், மறுதலையை 40 பாடல்களாலும் கூறுகிறது. இந்தப் பிரிவு திரிபிடகங்களுள் வினைய பிடகம், அபிதர்ம பிடகம் என்ற இரண்டையும் விட்டு சூத்திரப் பிடகம் ஒன்றை மட்டும் ஆதாரமாய்க் கொள்வதால் இப்பிரிவு இப்பெயர் பெற்றது. பொருள்கள் புறச்சமுதாயம், அகச் சமுதாயம் என இருவகை. இவை காட்சிப் பொருள், சிந்திக்கப்படும் பொருள் என்பவை. அகச் சமுதாயத்திற்குக் காரணம் ஐவகைக் கண்டங்கள். அவை உருவம், வேதனை, ஞானம், குறி, வாசனை என்பவை. உலகம் முழுமையும் இவ்விருவகைச் சமுதாயத்துள் அடங்கும். இச்சமயத்

தார்க்குப் பிரமாணங்கள் காட்சி அனுமானம் என்ற இரண்டே. இச் சமயம் கருத்துலகத்திற்குச் செய்துள்ள பேருதவி பிரபஞ்சத்தைப் படைக்கும் தொழில் மனத்திற்கு உண்டு என்று கூறியதாகும்.

### 4. யோகாசாரம் :

புத்தர் பெற்ற ஞானம் யோகத்தின் வழிதான் பெறமுடியும் என்ற கொள்கை உடையவர்களுக்கு யோகாசாரர் என்ற பெயர் அமையும். இது செயல் முறையில் மதத்தின் தத்துவத்தையும் விஞ்ஞான வாதம் என்பது கருத்தளவில் இதன் தத்துவத்தையும் உணர்த்தும். சர்வம் புத்தி மயம் ஜகத் என்பது இவர்கள் கொள்கை. நிராகார ஞானமேயன்றிப் பொருள் வேறு இல்லை - இக்கொள்கையை யோகாசாரர் வகுத்தாரென்பர்.

### 5. மாத்தியமிகம் :

நாகார்ச்சுனர் வகுத்த பிரிவு இது. பொதுவாக பரபக்கம் செய் வதேயன்றி சுபக்கம் சொல்வதில்லை. மற்ற பிரிவுகளின் இடைநிலையில் அல்லது மத்தியில் உள்ளமையால் இதற்கு மாத்தியமிகம் என்று பெயர். உலகம், ஆன்மா ஆகிய பொருள்களைக் குறித்து கேட்ட பொழுது புத்தர் மௌனமாக இருந்தார். அதுவே மாத்தியமிகர் கொள்கைகளை அவர் உணர்ந்தார் என்பதைக் காட்டும். சத்து, அசத்து, சதசத்து இரண்டுமல்லாதது என்ற சதுஷ்கோடி நிலை இவர்கள் ஆயும் முறை.

### 6. ஆருகதமதம் :

துறவு பூண்டவர் சிரமணர், இதுவே சமணர் என்றாயிற்று. இம் மதம் துறவு பூண்டவருக்கே முத்திப்பேறு என்பதால், சமணம் எனப் பட்டது. புலன்களையும் கர்மங்களையும் வென்றவர் ஆனமையால் ஜைனப் பெரியோர் ஜினர் (ஜயித்தவர்) எனப்பட்டனர். ஜினரை முதல்வராக உடைய மதம் ஜைனமதம் (சைனம்) சைனருக்குத் தெய்வம் அல்லது முத்திநிலையில் உள்ளவன் அருகன் - அருகனை வணங்குவோர் மதம் ஆருகத மதம். அருகன் பற்றற்றவன் ஆதலி னாலே நிர்க்கந்தன் (கந்தம் - பற்று). எனவே இம்மதம் நிர்க்கந்த மதம், இதுவே திரிந்து நிகண்டவாதம் என்றாயிற்று. சமணத்தில் பதார்த்தங்கள் எழுவகை. உடம்பு எடுத்ததற்கு முன் சீவன் உண்டோ இல்லையோ என்ற கேள்விக்கு விடை எழுவகையாகச் சொல்வர்; உண்டு, இல்லை, உண்டில்லை, சொல்லொணாது, உண்டு சொல்லொணாதது இல்லைசொல்லொணாது, உண்டில்லை. இதுபற்றி இது அநேகாந்த வாதம் எனப்படும், இதுவே சியாத் வாதம் (சியாத் - இருப்பதனால்). பிறர்கூறும் சமயமெல்லாம் சமணருடைய எழுவகை

யுள் ஒன்றில் அடங்கும். ஆதலால் அநேகாந்தவாதம்கூறும் ஆருகதமே எல்லாவற்றிலும் மேலானது என்பது அவர்கள் கருத்து.

ஆருகதத்தில் பதார்த்தங்கள் ஏழு ; சீவன் அசீவன் ஆசீசிரவம் சம்வரம் நிர்ச்சரம் பந்தம் வீடு என. சீவன் மூன்று: அநாத்சித்தனுன அருகன், பந்தத்தில் நீங்கிய முத்தன். கட்டுண்ட பெத்தன் என. அசீவன் - புற்கலம் (நாற்பூதம், நிலையியற் பொருள், இயங்கியற் பொருள்), ஆகாயம், தன்மம் அதன்மம் என நான்கு, ஆச்சிரவம் - பொறிவழிச்சேரல் சம்வரம். அவ்வாறு செல்லாமல் தடுத்தல். நிர்ச்சரம் - சுடுபாறையில் கிடத்தல் - தலை மயிர் பறித்தல் முதலிய தவம். பந்தம் — மோகம் முதலிய எண்குணங்கள். இருப்புக்குடம்பை தன்னகப்பட்ட சுரைப்பழத்தை நீரில் கீழ்ச்செலுத்துமாறு போல. வீடு — இருப்புக்குடம் கை தகர்ந்த வழி, சுரைப்பழம் மேலெழுமாறு போல,சீவன் சுதந்திரம் பெற்று மேற்செல்லல், மேலெல்லைக்கண் இருத்தலே முத்தி,

சமணம் இருவகை, சுவேதாம்பரர் திகம்பரர் என. சுவேதாம்பரர் வெள்ளையாடை அணிவர். இவர்கள் வடநாட்டில் உள்ளவர். திகம் பரருக்குக் கௌபீனம் உட்பட எந்த ஆடையும் இல்லை. இப்பிரிவே தமிழ் நாட்டில் இருந்தது. இது தமிழ் நாகரிகத்துக்கு முற்றிலும் முரண் ஆதலால், சம்பந்தர் இதை எதிர்த்துப் போர் செய்தார், இருவகைச்சமணரும் உருவ வழிபாடு உடையவர்.

### ஆசீவகமதம் :

இது புறப் புறச்சமயங்களில் ஒன்று. நூல்கள் இதைச்சமணத்தின் பிரிவு என்று கருதியும் கூட இது வேறு மதமாகவே இருந்திருக்கிறது. மகாவீரருக்குச் சமகாலத்தில் வாழ்ந்த மற்கலி என்பவர் தோற்றுவித்த சமயம் ஆசீவகம் எனப்படும். ஆசீவகத்தார் திகம்பரராய் இருந்தமை யின் இவரையும் சமணர் என்று கருதிய நிலை வந்தது. முதல் நான்கு பூதங்களோடு உயிர்சேர்ந்து ஐந்தாகிப் புண்ணிய பாவங்கள் செய்து கன்மத்துக்கு ஏற்ப முத்தி அடையும் என்பது இம்மதம். நூல்களில் அபூர்வமாய் ஆசிவகம் பேசப்பட்ட போதிலும்கூட, அதற்குத் தமிழ் நாட்டில் சிறப்பான ஆட்சியில்லை. இம்மதத்தின் தலைவன் பூர்ணன் எனச் சொல்லப்படுகிருன்.

தத்துவப்பிரகாசம் இந்த எட்டுவகையாரையும் வேத நிந்தகர், வேதத்துக்குப் புறம்பான புறச்சமயத்தார், இவருக்குத் தன்மமும் அறமும் முத்திநியமும் இல்லை என்று கூறும், யோகாகாரன் மாத்திய மிகன் இருவர் மதமும் மறுப்பும் தனித்தனி ஒரு பாடலாலும், ஏனைய மதமும் மறுப்பும் தனித்தனி இரண்டு பாடல்களாலும் இந்நூல் கூறுகிறது.

# திருத்தலயாத்திரை

வித்துவான் **வே. மகாதேவன்** எம். ஏ.

## ❊ திருப்புன்கூர் ❊

'அரியான்' 'அரியாலும் அயனாலும் காணமுடியாதவன் ஆண்டவன்' என்று இலக்கியங்கள் பேசுகின்றன அல்லவா? அதே இறைவன் அடியார்க்கு எளியவனாகிறான்; அடியார்க்கு அடியவனாகிறான். பக்தி வலையில் படுகிறான். அடியவர்க்காகப் பல திருவிளையாடல்களைப் பலதலங்களில் நிகழ்த்திப் பக்தர்க்கு அருள்பாலிக்கிறான் பரமன். அவ்வரிசையில் 'நந்தன்' என்னும் பக்தனுக்காக நந்தியை விலகி இருக்குமாறு அருள் சுரந்த திருத்தலம் 'திருப்புன்கூர்'. இது மூவர்பாடலும் பெற்ற தலம். காவிரியின் வடகரைத் தலங்களுள் 20-ஆவது தலம். இத்தலம் வைத்தீஸ்வரன் கோயிலில் இருந்து பட்டவர்த்தி செல்லும் பாதையில் 2½ கல் தொலைவில் இருக்கிறது.

'புன்கு' என்பது மரவகைகளில் ஒன்று. இதனைப் புங்கமரம் என்றும் கூறுவர். இம்மரம் இக்கோயிலில் தலவிருட்சம். எனவே இத்தலத்தைத் 'திருப்புன்கூர்' என்று முன்னோர் குறித்தனர். 'கஞ்சாரண்யம்' என்பது இதன் வடமொழிப் பெயர்.

சாலையின் இடதுபுறம் ஆலயக் கிளைப்பாதையை ஒரு வளைவு காட்டுகிறது. சிறிது தொலைவு சென்றால் ஆலயத்தை அடையலாம். கிழக்கு நோக்கிய சந்நிதி. ஆலயத்தின் முன்புறம்உள்ள 'இந்திர தீர்த்தம்' கோயிலின் முன்னழகை அதிகரிக்கிறது. ஐந்து நிலைக் கோபுரம் அடியவரை வரவேற்கிறது.

ஆலயத்துள் நுழைகிறோம். நந்தியும் கொடிமரமும் சுமார் இரண்டடி - வலது கைப்பக்கம் ஒதுங்கி இருக்கின்றன. 'இவ்வாறு இருப்பது ஏன்?' என்ற வினா நம் இதயத்து எழுகிறது. விடை தருகின்றன இலக்கியங்கள்,

திருப்புன்கூர்க்கு அருகில் உள்ள ஊர்களுள் ஒன்று ஆதனூர். இவ்வூரில் புலைக்குடியில் தோன்றியவர் 'நந்தனார்' என்பவர். இவர் வெட்டிமைத்தொழில் புரிந்து வந்தவர். பெரும் சிவத்தொண்டர். இவர் சிவாலயங்களுக்குச் செல்வார்; ஆலயத்திருவாயிலின் வெளியே நின்று ஆடுவார்; பேரன்புடன் பாடுவார். ஆலயத்தில் உள்ள இசைக் கருவிகட்குத் தேவையான போர்வைத்தோல், விசிவார் நரம்புகள், முதலியன நல்குவார். ஆண்டவனை அருச்சித்தற்குக் கோரோசனை அளிப்பார். மாதேவனை வழிபட்டு மகிழ்வார்.

இவ்வாறு சிவத்தொண்டு புரிந்து வந்த நந்தனார் திருப்புன்கூர்ச் சிவலோகன் திருவடிகளை மிகநினைந்தார். திருக்கோயில் தொண்டாற்ற எண்ணினார். ஆதனூரில் இருந்து காதல்மீக்கூரத் திருப்புன்கூர்க்கு வந்தார். திருப்புன்கூர்ச் சிவாலயத்தின் வெளியே நின்று இறைவனை வழிபட்டார். அப்போது அருடைய உள்ளத்தில் உதித்தது ஓர் அவா. 'சிவலோகன் திருவுருவை நந்தி மறைக்கிறதே; நேரில் காண இயலவில்லையே' என்று வருத்தம் அவர் நெஞ்சை நெருடிற்று. அடியார்க்கு எளிவந்தபிரான் நந்தனார் துயர் அறிந்தார். தன் திருமுன் இருந்த நந்தியைச் சற்றே விலகி இருக்குமாறு அருளினார் என்கின்றன இலக்கியங்கள்.

''சிவலோக நாதன் திருச்சந்நிதானம்
மலையாகிய நந்தி மறைத்திடுதிங்கே
தேரடியில் நின்று தெரிசித்தாலும்போதும்
உற்றுப்பார்க்கச் சற்று விலகாதோமாடு'

என்று நந்தனார் வேண்ட

''சற்றே விலகி இரும்பிள்ளாய்
சந்நிதானம் மறைக்குதாம்நீ
நற்றவம் புரியும் நம்மிடம்திரு
நாளைப்போவார் வந்திருக்கிறார்''

என்று இறைனை நந்திக்கு அருளியதாக 'நந்தன் சரிதக் கீர்த்தனை' கூறுகிறது.

ஆலயத்தின் வெளித்திருச்சுற்றை வலம்வருகிறோம், தென்கீழ் மூலையில் உள்ளது, 'நந்தனார் திருக்கோயில்'. இது தொன்மையான கோயில். 'அர்த்த பத்மாசனம் இட்டவராகக் கையில் 'தண்டு ஒன்று' ஏந்திக்கொண்டு காட்சி தருகிறார் நந்தனார். கழுத்தில் காணப்படும் புலிநகமாலையும், முடியலங்காரமும் உருவமைப்பும் இத்திருவுருவின் சோழர்காலக் கலையமைப்பைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

தென்மேற்கு மூலையில் கோயில் கொண்டிருக்கிறார் விநாயகர். இவர் 'குளம் வெட்டிய விநாயகர்' என்று கூறுகிறது தலபுராணம்.

''நந்தனார் திருப்புன்கூர் இறைவனை வணங்கியபின் ஒரு குளம் வெட்டினார்' என்பது பெரிய புராணத்தில் உள்ள செய்தி. இச்செய்திக்குக் கோபாலகிருஷ்ண பாரதியார் நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் புராண மெருகூட்டியுள்ளார். திருக்கோயிலின் மேற்புறம் உள்ளது ரிஷப தீர்த்தம். இதனைச் சீர்படுத்த நினைத்தார் நந்தனார். உதவுவார் இல்லாமையால் இறைவனைத் துதித்தார் நந்தனார். தன் அன்பருக்குதவுதற்காகக் கரிமுகக் கடவுளை அனுப்பினார் சிவ பெருமான். விநாயகர் நந்தன் முன் வந்தார்.

''நாளைப்போவார் நீ யாரப்பா என்றார்

பிள்ளையார் நான் உன் ஆளப்பா என்றார்.''

உரையாடல் நிகழ்ந்தது. நந்தனார் சிவனைத்துதித்துத்தியானத்தில் அழ்ந்தார். சிலநொடிகளில் பூதகணங்கள் குளம் வெட்டி முடித்தன. என்கிறது நந்தன் சரித்திரக் கீர்த்தனை. கோயிலின் பின்புறமுள்ள கோபுரவாயிலைக் கடந்தால் இத்தீர்த்தக்குளத்திற்குச் செல்லலாம்.

வடக்குத் திருச்சுற்றில் ஸ்தலவிருட்சம்—புன்குமரம் இருக்கிறது. இம்மரத்தை ஒட்டிய மேடையில் 'ஐந்துலிங்கங்களும்' எதிரே 'பிரும்மலிங்கமும்' உண்டு. ''சிவபெருமான் இத்தலத்தில் பரஞ்சுடர் லிங்கமொன்றும் ஐந்தெழுத்தின் உருவாக ஐந்திலிகங்களும் தோற்றிவித்தான். பிரமன் இவற்றை வணங்கி உய்த்தான்'' என்பது தலபுராணம்.

திருக்கோயிலை வலம் வந்து பதினாறு கால்களாலான நந்தி மண்டபத்தைக்கடந்து உட்புகுகிறோம். கோயிலில் நகரத்தார் திருப்பணிகள் நடந்துள்ளமையைக் கண்டமாத்திரத்தில் கண்டு கொள்ள முடிகிறது.

முதலில் மற்றொரு பதினாறுகால் மண்டபம். அதன்எதிரே வடபுறம் திருச்சுற்றுலையில் கோயில் கொண்டு அருள்பாலிக்கிறாள் 'சௌந்தரநாயகி'. தெற்கு நோக்கிய சந்நிதி.

இம் மண்டபத்தைக் கடந்து கோயிலுட்புகும் நுழைவுவாயிலின் மேற்புறத்தை அழகு செய்கிறது ஒரு சிம்மதோரணம் தென்புறம் கையிரண்டும் தலைமேல் குவித்து வணங்கிக் கூத்தாடுகிறார் நந்தனார். நடுவில் அடியவர்க்குக் காட்சி அருளுகிறார் சோமாஸ்கந்தர். வடபுறம் கைகுவித்தவராகக் காட்சிதரும் திருவுரு அதிகார நந்தி. இறைவன் அதிகாரநந்தியை விலகி இருக்குமாறு அருளிய நிகழ்ச்சியை விளக்கும் சிற்பச் சான்று இது.

மகாமண்டபம், அர்த்தமண்டபம், கருவறை என்பன கோயிற் பகுதிகள். கருவறையின் வெளிப்புறமுள்ள 'துவாரபாலகர்' உருவங்கள் சோழர்காலக் கலைக் கருவூலங்கள்.

கருவறையில் கோயில் கொண்டிருக்கிறார் 'சிவலோகநாதர்'.

இது சுயம்புலிங்கம்-மண்புற்றாலான லிங்கம் இது உலோக உறையொன்றால் மூடப்பட்டுள்ளது. நாடொறும் அபிடேகமுறுகிறது. திங்கட்கிழமை இரவு அர்த்தசாமத்தின் போது உலோக உறையைக் கழற்றி சுயம்புலிங்கமான புற்றுலிங்கத்துக்குப் புனுகுச் சட்டம் சார்த்தப் பெறுவது வழக்கம்.

(வளரும்)

# திருவிளையாடற் புராணம்

## உரைநடை

### சோம வார விரதம் நோற்கும் முறை

கார்த்திகை மாதத்திலேனும் மார்கழி மாதத்திலேனும் இரண்டு அமாவாசை சேர்ந்த மலமாதம் ஒழித்த மற்றைய மாதங்களிலேனும் சுக்கில பட்சத்தில் முதற் சோமவாரந்தொடங்கி நோற்றல் வேண்டும். ஞாயிற்றுக் கிழமையின் இரவிலே உணவு கொள்ளாது நிலத்திலே நித்திரை செய்ய வேண்டும். திங்கட்கிழமை விடியற் காலையில் எழுந்து மீனாட்சியம்மையோடு கூடிய சோமசுந்தரக் கடவுளைத் தியானித்து, அன்று செய்யவேண்டிய நித்திய கடன்களைச் செய்துமுடித்து, காம முதலிய குற்றங்களை மனத்தினின்றும் அகற்றிப் பொற்றாமரைப் பொய்கையை அடைந்து, விபூதி, வில்வத்தடிமண், தருப்பை, கோமயம் (பசுச் சாணம்), எள் என்பவற்றைச் சிரசிலே வைத்துக் கையிலே பவித்திரம் தரித்து, மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றும் ஒன்றுபடச் சங்கற்பஞ் சொல்லிச் சோமசுந்தரக் கடவுளைத் தியானித்து, ''இந் நிலவுலகிலுள்ள தீர்த்தங்கள் எல்லா வற்றிலும் மூழ்கிய பயனை இங்கேயே உறுதிபெறத் தந்தருள்க'' என்று வேண்டி நீராட வேண்டும். பிறகு, தோய்த்துலர்ந்த வஸ் திரத்தினால் ஈரம் துவட்டித் தோய்த்துலர்ந்த வெண்ணிற வஸ்திரம் இரண்டு தரித்துத் திருவெண்ணீற்றினை விதிப்படி அணிந்து, உருத் திராக்கம் பூண்டு, வெள்ளைமந்தாரம், முல்லை, மல்லிகை, சாதி, இரு வாட்சி, வெள்ளெருக்கு, வெண்டாமரை முதலிய வெள்ளை மலர்களை யும் வில்வம், அறுகு, அட்சதை, எள், விபூதி முதலியவற்றையும் கைக் கொண்டு திருக்கோயிலை அடையவேண்டும்.

முன்னர் சித்தி விநாயகக் கடவுளை வழிபட்டு 'எடுத்த காரியம் நிறைவேற வேண்டும்' என்று இரந்து வேண்டிப் பின்னர்த் திருக் கோயிலினுள் செல்லவேண்டும். அங்குத் துவாதசாந்தத்தில் உண்மை அறிவு ஆனந்த வடிவாய் விளங்குகின்ற சோமசுந்தரக் கடவுளை மனத்திலே சிந்தித்து, அச்சிவ வடிவமாகத் தன்னை ஆக்கிக்கொண்டு, மண் முதலாகச் சிவம் ஈறாகவுள்ள தத்துவாத்துவாவின் வடிவமான சிவலிங்கப் பெருமானை ஆசனம், மூர்த்தி, மூலம் முதலிய மந்திரங் களாலும் சிவாகம விதிப்படி பூசை செய்தல் வேண்டும். பஞ்சாமிர் தம், பஞ்ச கவ்வியம், ஐவகைக் கனிகள், தேன், சந்தனம், நீர் முதலிய

வற்ருல் திருமஞ்சனஞ் செய்தல் வேண்டும். அழகிய வெண்பட்டாடை அணிவித்துப் பச்சைக் கர்ப்பூரம் கலந்த சந்தனம் பூசி, மணங் கமழும் மல்லிகை முதலிய மாலைகளையும் பொன்னுபரணங்களையும் சாத்தித் திருவடியிலிருந்து திருமுடி ஈருக அங்கங்களைப் பூசித்தல் வேண்டும். பிறகு, பராசத்தியை இவ்வாறே திருவைந்தெழுத்தைப் பெண்பாற்கு இசைய உச்சரித்துப் பூசை செய்து, பசுவின் பாலுடன் கலந்து சமைத்த திருவமுது, பலகார வகைகள், பானீயம், தாம்பூலம் முதலியவற்றைப் படைத்துச் சோமசுந்தரக் கடவுள் திருமுன் மணங் கமழும் தூப தீபங் காட்டிக் கண்ணுடி முதலிய உபசாரங்களைப்புரிந்து வில்வத்திருல் அருச்சனை செய்யவேண்டும்.

வில்வம் சிவபெருமானுடைய இச்சை ஞானம் கிரியை என்னும் சத்திகளின் வடிவாய் உள்ளது. அவ்வில்வ மரத்தடியைச் சார்ந்து மூன்று நாட்கள் ஊணும் உறக்கமும் இன்றி ஹரஹர முழக்கம் செய்பவர் செய்த பஞ்சமகா பாதகங்களும் வஞ்சனையாற் புரிந்த கொலைகளும் நீங்கும். ஆதலின், வில்வம் சிறந்தது. இதழ் மடங்கியும் சுருங்கியும், வாடியும், உலர்ந்தும், மயிர் சிக்கியும், சிலம்பிக்கூடு கட்டியும், புழுக்கள் அரித்தும், பறவை எச்சம் பெற்றும் இருக்கும் வில்வத் தளங்கள் பூசைக்கு ஒவ்வா. வேறு ஒன்றும் கிடையாவிடின் இத்தகைய குற்றங்களுள்ள வில்வத் தளங்களைச் சுத்தி செய்து பூசிக்கலாம். ஏனெனில் வில்வம் சிறந்ததாகும்.

சிவபெருமானுடைய ஆயிரந் திருநாமங்களையுங்கூறி வில்வமிட்டு அருச்சித்து, "[1]எழுதுவதற்கரிய எழில்கொண்ட மங்கைபங்கனே! ஒவ்வொருநாளும் அடியேன் செய்யும் குற்றங்கள் எண்ணிறந்தனவாம்; கொடிய நஞ்சினையும் அமுதாக்கொண்ட வள்ளலே! அடியவன் செய்யும் [2]குற்றங்களையும் குணமாகக்கொண்டு காத்தருள்க" என்று வேண்டி, நிலமிசை வீழ்ந்து வணங்கி எழுந்து மும்முறை வலம் வந்து துதித்துக் கல்மனமும் கரைந்துருக நின்று விரும்பிய வரங்களை வேண்டினுல், நல்ல மணப்பேறு, மக்கட்பேறு, நல்வாக்கு, கல்வி,

---

1. இங்கு, "படியெழுதலாகாத மங்கையோடு, மேவனை" (அப்பர் தேவாரம்–திருவாலவாய்) எனவரும் அடிகள் உன்னற்பாலன.

2. இங்கே, "குற்றம் செய்யினும் குணமெனக்கருதும்கொள்கை கண்டு", "பின்னை என் பிழையைப் பொறுப்பானைப் பிழையெலாம் தவிரப் பணிப்பானை" (சுந்தரர் தேவாரம், திருப்புன்கூர், திருவாரூர்) எனவும் "குன்றே யனைய குற்றங்கள் குணமா மென்றே நீ கொண்டால்" (திருவாசகம்-குழைத்த பத்து) எனவும் வருகின்ற அடிகள் நினைக்கற்பாலன.

செல்வம். போகம், பகைவரை வெல்லுதல், நோய் நீக்கம், அகால மரணமின்மை, அரசுரிமை முதலான நலன்கள் யாவும் எண்ணிய வாறே கைகூடும்.

சொக்கலிங்கப் பெருமானைத் தொட்டுப் பூசித்தற்கு உரியவர் அல்லாத வேதங்களை உணர்ந்த அந்தணர் முதலோர் ஆன்மார்த்த இலிங்கத்தை இவ்விதிப்படி பூசித்துச் சோமவார விரதம் நோற்கக் கடவர். ஆன்மார்த்த பூசைக்குரிய உரிமை அளிக்கப்படாதவர் பொருள் கொடுத்து சிவப்பிராமணரைக் கொண்டு சோமசுந்தரக் கடவுளைப் பூசை செய்வித்து இவ்விரதம் நோற்கக் கடவர்.

**சோமவார விரத வகை**

இச் சோமவார விரதம் ஐவகைப்படும். அவை உச்சிப்பொழுதில் உண்ணுதல், இரவில் உண்ணுதல், இருவேளையும் உண்ணுதிருத்தல், உறங்காதிருத்தல், நான்கு யாமமும் சிவபூசை செய்தல் என்பன. இவ்வைந்து வகையும் ஒன்றைக்காட்டிலும் ஒன்று மிகவும் சிறந்ததாகும். இவற்றை நோற்கும் ஆண்டுகள் முறையே ஓராண்டு, ஈராண்டு, மூன்றுண்டு, பன்னிரண்டாண்டு, வாழ்நாளெல்லை உரியனவாகும். வாழ்நாள் எல்லையளவும் கருதி நோற்பவருக்கு [1]உத்தியாபனம் இல்லை. தாம் விரும்பிய விரதகால எல்லை முடிவிலே விதிப்படி உத்தியாபனம் செய்தல் வேண்டும். இடையே விடுவோரும் உத்தியாபனஞ் செய்யாதவரும் விரத பலத்தை அடையார். ஆதலால், முறைப்படி விரதத்தை அனுட்டித்து முடிவிலே உத்தியாபனம் பண்ணல் வேண்டும்.

**சோமவார விரதம் முடிக்கும் முறை**

[2]மண்டபம், குண்டம், மண்டலம் இவற்றை முறைப்படி வகுத்து, [3]முப்பது கழஞ்சு வெள்ளியினுல் சிவபெருமானின் திருவுருவத்தை அமைப்பிக்கவேண்டும். ஆசாரியர் சொற்படி திங்கட்கிழமை விடியற் காலையில் நித்திய கடன்களை முடித்து, உச்சிப்பொழுது தொடங்கி மாலைப்பொழுதுவரையும் சிவபுராணங்களைக் கேட்டு, இரவு நான்கு

---

1. உத்தியாபனம் - குறித்த ஆண்டின் எல்லைவரை விரதம் நோற்று முடிக்கும்பொழுது செய்யும் கிரியை.

2. மண்டபம் - இஃது இரவி சூத்திரம் முதலிய யாகசாலை. குண்டம் - இது சதுர குண்டம். மண்டலம் - இது வேதிகையின் மேல்போடும் கௌரீ லதை, உமாகாந்தம் முதலிய மண்டலேசுவரர்.

3. இங்குக் குறிப்பிட்ட முப்பது கழஞ்சு வெள்ளி உத்தமம்; இருபது கழஞ்ச மத்திமம் ; பத்துக் கழஞ்சு அதமம். (கழஞ்சு-பன்னிரண்டு பணவெடை கொண்ட அளவு.) இதனை, ஒருபான் கனிட்டமுப் பான் உத்தமமே, இருபான் கழஞ்சிடை என்(று) எண்" எனவரும் சோமவார கற்பக் குறட்பாவால் அறியலாம்.

யாமத்திலும் சிவபெருமானைப் பூசித்தல் வேண்டும். அப்பூசனை முடிவில் சிவமூல மந்திரத்தினுல் நூற்றெட்டு ஆகுதி யாமந்தோறும் செய்தல் வேண்டும். ஒவ்வொரு யாமத்திலும் ஆயிரம் நாமஞ் சொல்லி ஆயிரம் வில்வம்சாத்தி வழிபடவேண்டும். திருவைந்தெழுத்தினுலே இறைவனுக்கு அருக்கியம் கொடுக்கவேண்டும். சிவமூல மந்திரத்தினுலும் மற்றைய மந்திரங்களினுலும்அக்கினியைவளர்த்துப் பூரணுகுதி செய்து வேள்வியை முடிக்கவேண்டும். பொழுது விடிந்த பின் நித்திய கருமங்களை முடித்துப் பதின்மூன்று வாழையிலையின் மேலே அரிசியும் காய் கறிகளும் பரப்பிப் பசுவின்பால் நிறைந்த குடம் பதின்மூன்றனை அரிசியின்மேல்வைத்துச் சிவார்ச்சனைக்குரிய சிவப் பிராமணர்களை அழைத்து நியமித்து, அவர்களுக்குக் காதிலணியும் குண்டலமும் மோதிரமும் அளித்து, அவர்களைச் சிவபெருமானுகவே கருதி அருச்சித்துத் தக்கிணையோடு பாதுகை, விசிறி. குடை, வஸ்திரம் முதலியவற்றைத் தானஞ்செய்து விடையளித்து அனுப்புதல் வேண்டும்.

பிறகு, ஆசாரியரை அவரது மனைவியுடன் ஆசனத்தில் அமரச் செய்து, பொன்னுடையும் அணிகலன்களும் அணிவித்து, மலர்களிட்டு வழிபட்டுச் சிவபெருமானை நிருமித்துப் பூசிக்கப்பெற்ற திருவுருவத்தையும், பொன் நிலம் முதலியவற்றையும், ஆடை, மாலை, கொம்பணி முதலியன அணிந்த கன்றுடன் கூடிய பசுவையும் தானம் செய்தல் வேண்டும். இவ்வாறு உத்தியாபனத்தை முடித்தபிறகு ஆசாரியரின் கட்டளைப்படி சிவனடியார்களோடும், மக்களோடும், சுற்றத்தாரோடும் சேர்ந்து அமுது செய்தல் முறையாகும்.

**சோமவார விரதத்தின் பயன்**

இச் சோமவார விரதத்தை முன்பு திருமால், நான்முகன், இந்திரன் முதலிய தேவர்களும் முனிவர்களும் பதினெண் கணத்தவர்களும் அனுட்டித்தார்கள். மனிதரும் அனுட்டித்துப் பெறுவதற்கரிய போகத்தையும் வீடுபேற்றையும் பெற்றனர். இவ் விரதத்தை அனுட்டிப்பவர், கொடிய பகையும் மனத் துன்பமும் நீங்கி அளவிறந்த பிறவிகளில் செய்த தீவினைகள் ஒழியப்பெற்று, எடுத்த பிறப்பிலேயே சிவகதியை அடைவர். இவ் விரதத்தைக் கூறினவர்களும் கேட்டவர்களும் மனைவி, மக்கள், சுற்றத்தார் முதலியவர்களோடும் இனிது வாழ்ந்து தேவருலகத்தில் பதினுன்கு இந்திரப்பட்டமளவும் இனிது வீற்றிருப்பார்கள்.

**மூவேந்தர்களும் இந்திரனிடம் செல்லுதல்**

இவ்வாறு அகத்திய முனிவர் சோமவார விரத முறையினைச் சொல்லக்கேட்ட தமிழ் வேந்தர் மூவரும், அவரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு மதுரையை அடைந்தனர்; பொற்றுமரை வாவி

யிலே நீராடிச் சோமசுந்தரக் கடவுளையும் அங்கயற்கண் அம்மையை யும் வணங்கி வழிபட்டுச் சோமவார விரதத்தினை அனுட்டித்தனர்; அவ்விரதத்தின் பயனைப் பெற்று ஆகாயமார்க்கமாகப் புறப்பட்டுச் சென்றனர். தேவேந்திரன் அதனை அறிந்து வந்த மன்னர் மூவரும் இருக்கும் பொருட்டுத் தனது சிங்காசனத்தில் தாழ்ந்திருக்குமாறு வேறு மூன்று சிங்காதனங்களை இடுவித்தான். ஆகாயமார்க்கமாகச் சென்ற அரசர் மூவரும் தேவருலகத்தை அடைந்து இந்திரன் அருகில் உற்றனர். அப்போது பனைமாலை அணிந்த சேரனும், ஆத்தி மாலை அணிந்த சோழனும் இந்திரன் காட்டிய ஆசனங்களில் அமர்ந்தனர். உக்கிரபாண்டியன் மட்டும் இந்திரனுடைய சிங்காதனத்தில் ஏறி அவனோடுநிகராக அமர்ந்தான். இந்திரன் பாண்டியன்மீது பொறாமை யுற்று, அருகிலிருந்த மற்றைச் சேரனையும் சோழனையும் நோக்கி முகமன்கூறி, ''நீங்கள் வந்த காரணம் யாது?'' என்று வினவினான். அவர்கள் இந்திரனை நோக்கி, ''மகபதியே! எங்கள் நாட்டிலே மழை இன்மையால் அதனை வேண்டி இங்கு வந்தோம்'' என்று கூறினர். இந்திரன் மனமகிழ்ந்து அவ்விருவர் நாடுகளில் மாத்திரம் மழை பெய்ய அருளி, இரத்தினாபரணங்களையும் பொன்னுடைகளையும் கொடுத்து, ''நீவீர் செல்லுங்கள்'' என்று விடையளித்தான்.

### தேவர்கோன் பாண்டியனுக்குப் பூணாரம் அளித்தல்

அம்மன்னர்கள் மீண்ட பின்பு இந்திரன், உக்கிர பாண்டியன் தனது சிங்காதனத்தின்கண் சமமாக இறுமாப்புடன் வீற்றிருத்தலை யும், பின்னும் மழைவேண்டாத பெருமிதத்தையும் நோக்கி ஒரு சூழ்ச்சி செய்யக்கருதினான். உடனே மிக [1] உயர்வாகிய சிறப்புச் செய்கின்றவனைப்போல அளவில்லாத கிங்கரர்களாலே தாங்கி வரப் பெற்று அவர்கள் தோள்வலி மிக மெலிந்து வருந்துதற்குக் காரண மாகிய ஒரு முத்து மாலையை அவனுக்கு அன்புடன் கொடுத்தான். உக்கிர பாண்டியன் அதனை வாங்கி, மலர்மாலை போல விரைந்து தனது கழுத்திலே அணிந்து கொண்டான்.[1] இந்திரன் அதனைக்கண்டு பெருவியப் பெய்திப் பாண்டியனை நோக்கி, ''வேப்பமலர் மாலையை

---

1. இங்குப் பாண்டியன் முத்தாரம் பூண்டதை. ''திங்கட் செல்வன் திருக்குலம் விளங்கச், செங்கணு யிரத்தோன் திறல்விளங்கு ஆரம், பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி'' (சிலப்பதிகாரம் - காடு காண்காதை) எனவும். ''தேவர்கோன் பூணாரந் தென்னர் கோன் மார்பினவே'' (சிலப்பதிகாரம் - ஆய்ச்சியர் குரவை) எனவும், ''வானவர்கோன் ஆரம் வயங்கிய தோட் பஞ்சவன்றன், மீனக் கொடிபாடும் பாடலே பாடல்'' (சிலப்பதிகாரம் - வாழ்த்துக்காதை) எனவும் வருகின்ற அடிகளாலும் உணரலாம்.

அணிந்த மார்பனே ! இன்றுதொட்டு உன்னை 'ஆரம் தாங்கு பாண்டியன், என்று உலகமெல்லாம் நன்கு மதிப்பதாக" என்று புகழ்ந்து கூறினன். உக்கிர பாண்டியன், அப் புகழ்ச்சியைச் சிறிதும் பொருட்படுத்தாது அவ்வரியணையினின்றும் இறங்கித் தனது மதுரை மாநகரை அடைந்தான்.

### உக்கிரபாண்டியன் முகிலைத்தளை இடுதல்

பிறகு, இந்திரனுடைய ஆணையினாலே சேர நாட்டிலும் சோழ நாட்டிலும் வளம்பெருகுமாறு மழை நிறையப் பெய்தது. பாண்டி நாடு மட்டும் முன்போல மழை இன்றி இருந்தது. ஒரு நாள் உக்கிர பாண்டியன், பொதிய மலையை அடுத்த சந்தன மரங்கள் அடர்ந்த சாரலை அடைந்து, அங்குள்ள யானை சிங்கம் பன்றி புலி கரடி மான் முதலிய விலங்குகளை வேட்டையாடும்பொழுது [1] புட்கலாவருத்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி என்னும் மேகங்கள் நான்கும் அப் பொதியமலையின்மேல் வீழ்ந்து மேய்ந்துகொண்டிருத்தலைக் கண்டான்; உடனே அவற்றைப் பிடித்து, யானைகளைத் தளையிடுவது போல் கடிய விலங்கிட்டுக் கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் இடுவித்தான்.[2] அதனை இந்திரன் கேட்டு விறகில் பற்றிய தீப்போல் கடுங்கோபங் கொண்டு போரிடக் கருதிப் புறப்பட்டான்.

### இந்திரனும் உக்கிரவழுதியும் போரிடுதல்

அப்போது, கடல் வறக்கும் வண்ணம் வேல் விடுத்ததனையும், மிக வலிய ஆரத்தைத் தாங்கிய பெருமிதத்தையும், மேகத்தை விலங்கிட்ட செருக்கையும் இந்திரன் நினைந்து நினைந்து, "இங்கு ஒரு மனிதனுக்கு இத்துணை வலிமை வந்ததற்குக் காரணம் யாது?" என்று மனமழிந்

---

1. இம் மேகங்கள் நான்கும் முறையே பொன், பூ, மண், கல் என்பவற்றைச் சொரிவன.

2. இதனை, "இடியுடைப் பெருமழை பெய்தா தேகப், பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப, மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்க" (சிலப்பதிகாரம் - காடுகாண் காதை) எனவும், "அடுபடைப் பூழியன் கடுமுரண் பற்றி, இட்டவெங் கொடுஞ்சிறைப் பட்ட கார்க் குலம்" (கல்லாடம்) எனவும் வருகின்ற அடிகளாலும் அறியலாம். பாண்டியன் மேகங்களைப் பிடித்துக் கட்டிய இடம் "கட்டு நல்லூர்" எனவும், சிறைப்படுத்திய இடம் "இருஞ்சிறை" எனவும் பெயர் பெறும், இருஞ்சிறை, கட்டுநல்லூருக்குச் சமீபத்தில் உள்ளதால் 'கட்டு நல்லூர் இருஞ்சிறை' எனவும் வழங்கும். இவை மானா மதுரைக்கு அண்மையில் உள்ளன.

தான் ; உடனே உக்கிர பாண்டியனுடன் போர் புரியும்பொருட்டுத் தேவசேனைகளோடு மதுரையைச் சூழ்ந்தான். அதுகண்ட ஒற்றர்கள் ஓடிச்சென்று, உக்கிரவழுதியின் திருவடிகளை வணங்கி, ''அரசே! நம்முடைய நகர்ப்புறத்தே தேவ சேனைகள் வந்து சூழ்ந்தன'' என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அப்போது உக்கிரபாண்டியன் கோபமும் மானமும் மிக்கவனாய் அரியணையினின்றும் நீங்கி, ''போருக்குத் தேரையும் யானையையும் குதிரையையும் புறப்படுதற்கு ஏற்ப ஒப்பனை செய்க! வீரர்களெல்லோரும் விரைந்து முன் செல்லுக!'' என்று கூறி, அவற்றை முன்னே நடப்பித்து, "போருக்கு வந்தவர் யாவர்" என்று கருதாமல் யானைமீதேறி நகரின் மதிலைக் கடக்குமுன், தேவர்கள் நெருங்கி ஆரவாரித்துப் பல படைகளை எடுத்து வீசினர்; கணைகளை ஊழிக் காலத்தில் பொழியும் மழைபோலச் சொரிந்தனர்.

அதுகண்ட பாண்டியனின் படைவீரர்கள் ஆரவாரித்துப் பல்வேறு படைக்கலங்களை வீசி, அம்புகளால் அமரர்களின் உடலைத் தைத்து மூடும்படி செய்தனர். சிலருக்குத் தலைகள் உடைந்தன; சிலருக்குக் கால்கள் அறுபட்டன; சிலருக்குத்தோளும் கையும் குறைபட்டன. உதிர நீர் வெள்ளமாகப் பெருகிக்கடலை நோக்கி ஓடியது. பூதங்களும் கழுகுகளும் பேய்களும் போர்க்களத்தில் வந்து நெருங்கின. வானவர் தலைவனாகிய இந்திரனுடைய சேனைகள் புறமுதுகு காட்டி ஓடின. போர்க்களத்தில் தலையற்ற உடல் கள் ஆடின; பூதங்கள் பாடின; கூளிகள் கொற்றவையின் திருவடிகளைத் தம் முடியில் சூடிக் கொண்டன; பிணக் குவியல்கள் வானத்தை அளாவ நிலவுலகை மூடின.

இந்திரன், தன் வீரச் சேனைகள் அழிந்தனவற்றைக் கண்டு, தீயினைச் சிந்தும் கண்களோடு பஞ்சிற்பட்ட நெருப்புப்போல் சினந்து, பதைபதைத்து வஞ்சினங்கூறித் தெய்வப் படைக்கலங் கொண்டு போரிடக்கருதி முன்னர்க் கதிரவன் படையைவிடுத்துஆரவாரித்தான். உக்கிரபாண்டியன் திங்கட் படையினை விடுத்து அதனைத் தடுத்தான். வானவர்கோன் நரசிங்கப் படையை விடுத்தான். பாண்டியன் சரபப் படையை விடுத்து அதனை அழித்தான். இந்திரன் மோகக்கணையை விடுத்தான். மீனவன் ஞானக் கணையால் அதனை அழித்தான். பிறகு இருவரும் மற்போர் புரிந்தனர். இந்திரன் பாண்டியன் மேல் வச்சிரப் படையை வீசி ஆரவாரித்தான். சிங்கம் போன்ற பாண்டியன் தன் கையிலிருந்த வளையை (திகிரிப்படையை)ச் சுழற்றி விரைந்து வீசினான்.

---

1. இங்கு, ''வச்சிரத் தடக்கை அமரர் கோமான், உச்சிப் பொன்முடி ஒளிவளை யுடைத்தகை'' (சிலப்பதிகாரம் - கட்டுரைக் காதை) எனவரும் அடிகள் கருதற்பாலன.

அவ்வளை, வச்சிரப்படையை வீழ்த்தி இந்திரனுடைய முடியைக் கீழே தள்ளிச் சிதைத்தது[1]. உடனே இந்திரன் நாணமும் அச்சமும் கொண்டு புறங்கொண்டோடினன்; [1]"கிரவுஞ்ச மலையினைப் பிளந்த முருகக் கடவுளைப்போல் வலிமையுடைய உக்கிரபாண்டியன் வீசிய வளையானது என் தலையினைச் சிதையாது என் முடியை மட்டும் சிதைத்ததற்குக்காரணம் யான் முன்பு சோமசுந்தரக் கடவுளைப் பூசை செய்ததே ஆகும்'' என்று சிவபெருமான் திருவருளைப் பாராட்டினன்.

**இந்திரன் வேண்டுகோளால் பாண்டியன் முகிலை விடுவித்தல்**

போருக்கு ஆற்றாது புறங்கொடுத்தோடிப் பொன்னுலகத்தில் புகுந்த இந்திரன் பின்பு, "நினது நாட்டிலுள்ள ஊர் முழுவதுக்கும் மழை வளம் தருகிறேன்; ஆதலின், தளையினை நீக்கி என்னுடைய மேகங்களைத் தருவாயாக'' என்று உக்கிரவழுதிக்குத் திருமுகம் ஒன்று அனுப்பினன். முடங்கல் கொண்டுவந்த தேவதூதன் உக்கிர பாண்டியன் திருவடிகளை வணங்கி ஒதுங்கி வாய்புதைத்து நின்று ஓலையை நீட்டினன். அருகிலுள்ள ஒருவன் அதனை வாங்கிப் பாண்டியனின் முன் வாசித்துக் காட்டினன். உக்கிரபாண்டியன் அதுகேட்டு இந்திரனுடைய வார்த்தையை நம்பாமையால் மேகங்களைச் சிறை நீக்க மறுத்துவிட்டான். அப்பொழுது அங்கிருந்த, இந்திரனுக்கு எக்காலத்தும் நண்பனுயுள்ள ஒரு [2]வேளாளன் (ஏகவீரன் என்பவன்) பாண்டியனை நோக்கி, "**அரசே! நான் பிணை**'' என்று சொல்லி வணங்கினன்.

---

1. உக்கிர பாண்டியன் இந்திரனைத் தனித்து நின்று வெற்றி பெற்றதனுல் இவ்விடம் 'தனிச்சயம்' எனப் பெயர்பொறும். இஃது, 'ஐயங்கோட்டை தனிச்சயம்' எனவும் வழங்கும். இவ்வூர் மதுரைக்கு மேற்கே சோழவந்தானுக்குச் சமீபத்தில் உள்ளது.

2. இவ்வேளாளன் பாண்டி மண்டலத்துக் களவேள்வி நாட்டில் (காட்டு நாட்டில்) உள்ள ஏழூர்களுள் ஒன்றுன நாமனூரை உடையவன். மதுரைக்கு நேர் கிழக்கே வீரசோழன் என்னும் ஊருக்கு அண்மையில் களவேள்வி நாடு உளது. இவ்வேளாளன் இந்திரனுக்கு உபகாரம் செய்யும் பொருட்டுப் பிறரை யெல்லாம் தள்ளிவிட்டு 'நாம் முன்' என்று சொல்லிக்கொண்டு வந்தமையால் அவன் ஊர் 'நாமுனூர்' என வழங்கியது.

மேகத்திற்கு (மழைக்கு), வேளாளன் பிணைகொடுத்த இடம், கப்பிஞ்சி நாட்டைத் தன்னிடத்தே கொண்ட "கார்வளங்கொள் மண்டலம்'' அல்லது "மழைக்குப் பிணைகொடுத்த மங்கலநாடு'' எனப் பெயர் பெறும். இது பரமக்குடிக்கு வடக்கே உள்ளது.

# திருக்கணித பஞ்சாங்கம்

**தி. கி. நாராயணசாமி, கடலூர் - 607 001.**

ரௌத்திரி௵ வைகாசிமீ (1980 மே - ஜூன்)

திதி, நட்சத்திரக் காலக் குறிப்பு (ரயில்வே மணி கணக்கில்)

| தமிழ் ௳ | ஆங்கில ௳ | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (14—5—80) | புதன் | ● அமாவாசை 17-30 | பரணி 11-39 |
| 2 | (15—5—80) | வியாழன் | பிரதமை 14-41 | * கார்த்திகை 9-32 |
| 3 | (16—5—80) | வெள்ளி | துதியை 12–21 | ரோகணி 7-52 |
| 4 | (17—5—80) | சனி | திரிதியை 10-39 | மிருகசீரிஷம் 6-48 |
| 5 | (18—5—80) | ஞாயிறு | சதுர்த்தி 9-43 | திருஆதிரை 6-28 |
| 6 | (19—5—80) | திங்கள் | பஞ்சமி 9-36 | புனர்பூசம் 6-57 |
| 7 | (20—5—80) | செவ்வாய் | சஷ்டி 10–20 | பூசம் 8–15 |
| 8 | (21—5—80) | புதன் | சப்தமி 11–48 | ஆயில்யம் 11-17 |
| 9 | (22—5—80) | வியாழன் | அட்டமி 13-51 | மகம் 12-54 |
| 10 | (23—5—80) | வெள்ளி | நவமி 16–16 | பூரம் 15-52 |
| 11 | (24—5—80) | சனி | தசமி 18-48 | உத்திரம் 18-57 |
| 12 | (25—5—80) | ஞாயிறு | ஏகாதசி 21-13 | அஸ்தம் 21–55 |
| 13 | (26—5—80) | திங்கள் | துவாதசி 23-20 | சித்திரை 24-36 |
| 14 | (27—5—80) | செவ்வாய் | திரயோதசி 25-01 | சுவாதி 26-52 |
| 15 | (28—5—80) | புதன் | சதுர்த்தசி 26–14 | விசாகம் 28-40<br>வைகாசி விசாகம் |
| 16 | (29—5—80) | வியாழன் | O பௌர்ணமி 26-58 | அனுஷம் முழுவதும் |
| 17 | (30—5—80) | வெள்ளி | பிரதமை 27–14 | அனுஷம் 6 00 |
| 18 | (31—5—80) | சனி | துதியை 27-05 | கேட்டை 6-54<br>திருஞானசம்பந்தர் குருபூஜை |
| 19 | ( 1—6—80) | ஞாயிறு | திரிதியை 26-34 | மூலம் 7-24 |
| 20 | ( 2—6—80) | திங்கள் | சதுர்த்தி 25–54 | பூராடம் 7–32 |
| 21 | ( 3—6—80) | செவ்வாய் | பஞ்சமி 24-34 | உத்திராடம் 7-21 |
| 22 | ( 4—6—80) | புதன் | சஷ்டி 23-07 | திருஓணம் 6-52 |
| 23 | ( 5—6—80) | வியாழன் | சப்தமி 22-12 | அவிட்டம் 6-05<br>சதயம் 29-01 |
| 24 | ( 6—6—80) | வெள்ளி | அட்டமி 19-20 | பூரட்டாதி 27 41 |
| 25 | ( 7—6—80) | சனி | நவமி 17-03 | உத்திரட்டாதி 26-06 |
| 26 | ( 8—6—80) | ஞாயிறு | தசமி 14-34 | ரேவதி 24-20 |
| 27 | ( 9—6—80) | திங்கள் | ஏகாதசி 11-55 | அசுவனி 22-28 |
| 28 | (10—6—80) | செவ்வாய் | துவாதசி 9-14 | பரணி 20-36 |
| 29 | (11—6—80) | புதன் | திரயோதசி 6-38<br>சதுர்தசி 28-13 | * கார்த்திகை 18-53 |
| 30 | (12—6—80) | வியாழன் | ● அமாவாசை 26-08 | ரோகிணி 17 26 |
| 31 | (13—6—80) | வெள்ளி | பிரதமை 24-33 | மிருகசீரிஷம் 16-25 |
| 32 | (14—6—80) | சனி | துதியை 23-33 | திருஆதிரை 15-58 |

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | (உள்நாடு) | ரூ. | 100—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | (உள்நாடு) | ரூ. | 7—50 |
| ,, | (ஸ்ரீலங்கா) | ரூ. | 10—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

## விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின்பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள்பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60—00 |
| உள் அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

முகவரி :- நிர்வாக ஆசிரியர் :- 'ஸ்ரீ குமரகுருபரர்'
ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள் Pin 612 504
(தஞ்சை மாவட்டம்)

---

| | | | | |
|---|---|---|---|---|
| திருவருட்பயன் (விளக்க உரையுடன்) | | விலை | ரூ. | 1—50 |
| நீதிநெறி விளக்கம் | ,, | விலை | ரூ. | 1—50 |
| உண்மைநெறி விளக்கம் | ,, | விலை | ரூ. | 0—75 |
| கந்தர்கலி வெண்பா | ,, | விலை | ரூ. | 1—50 |
| உண்மை விளக்கம் | ,, | விலை | ரூ. | 1—00 |
| திருவுந்தியார் | ,, | விலை | ரூ. | 1—25 |
| கொடிக்கவியும் வினாவெண்பாவும் | ,, | விலை | ரூ. | 0—75 |

இவற்றின் உரையாசிரியர் திரு. கு. சுந்தரமூர்த்தி, M. A.,
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.
ஒவ்வொன்றிலும் 20 பிரதிகளுக்குக் குறையாமல்
வாங்குவோருக்கு 20% கழிவு உண்டு.
ஏழு நூல்களுக்கும் தபாற் கட்டணம் 60 காசுகள் தனி,
இவற்றின் விற்பனைத் தொகை 'ஸ்ரீ குமரகுருபரர்' சமய இலக்கியத்
திங்களிதழின் வளர்ச்சி நிதியைச் சாரும்.

நூல்கள் கிடைக்குமிடம் :-
நிர்வாக ஆசிரியர் : 'ஸ்ரீ குமரகுருபரர்'
ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள் Pin 612504
(தஞ்சை மாவட்டம்)

---

ஸ்ரீ காசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி:— ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள் Pin-612504.